# சத்சங்கமும் ஸ்வாத்யாயமும்





ஸ்ரீ சுவாமி சிவானந்தா

இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு

# சத்சங்கமும் ஸ்வாத்யாயமும்

அருளியது :

**ஸ்ரீ சுவாமி சிவானந்தா**

தமிழாக்கம் :

*திரு. S. R. வரதராஜன்*, B. A, B. T.,







வெளியிடுவோர் :

**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்**

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் :: சேலம் ஜில்லா.

விலை ] 1983 [ ரூ. 3-00

# ஆசியுரை

எல்லாம் வல்ல இறைவனுக்கு வணக்கங்கள். வணக்கத்திற்குரிய குரு மகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதத் திருவடிகளுக்கு வணக்கங்கள். கலியுகத்தில் மனித குலத்துக்குச் செய்யும் தொண்டுகளுள் ஆன்மீக ஞானத்தைப் பரப்புவதே மிகச் சிறந்த தொண்டாகும். ஏனெனில் அது மனிதர்கள் அறியாமை, துன்பம், துயரம் ஆகியவற்றிலிருந்து விடுபட்டு வாழ்க்கையின் உண்மையான இலட்சியத்தை அடைய உதவுகிறது. ஆன்மீக ஞானமும் தர்மோபதேசமும் தன்னலத்தையும் மனித இயல்பிலுள்ள தீய பண்புகளையும் போக்குகின்றது.

தமிழ் நாட்டில் சேலம் மாவட்டத்திலுள்ள இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கக் கிளையானது தோன்றியதிலிருந்து கடந்த பல ஆண்டுகளாகச் செய்துவரும் ஒப்பற்ற ஞான யக்ஞ சேவையின் ஒரு பகுதியாக இந்த நூலை வெளியிட்டு அதனுல் நம் நாட்டு மக்களுக்கு அரிய தொண்டைச் செய்துள்ளது.

அவர்கள் வழக்கமாகச் செய்துவரும் ஞான யக்ஞப் பணியாக இவ்வாண்டு வெளியிடும் இந்த நூலுக்கு முகவுரை அளிப்பதில் பெருமகிழ்வடைகின்றேன். இதைப் படிக்கும் அனைவரும் பெரும் பேற்றை அடைவார்களாக. இத் தொண்டைச் செய்து முடித்த இராசிபுரம் கிளையையும் அதற்குக் கொடையுள்ளத்துடன் தவருது உதவும் அன்பர்கள் அனைவரையும் பாராட்டுகின்றேன். வழக்கம்போல சேலம் லிட்டரரி பிரஸ் உரிமையாளர்கள் குருதேவருடைய தெய்வீக வாழ்க்கைச் சங்கம் மேற்கொள்ளும் ஆன்மீகத் தொண்டில் அவர்களுக்குள்ள நன்றுத பக்தியுடன் இந்த நூலை அச்சிடும் அருமையான பணியைச் செய்திருக்கின்ருர்கள். அவர்களுக்கும் இந் நூலைப் படிப்பவர்களுக்கும் இறைவனுடைய பேரருள் கிட்டட்டும்.

Swami Chidananda

ௐ

ஓம்

# சத்சங்கமும் ஸ்வாத்யாயமும்

## இப்புத்தகம் அச்சிட நன்கொடை அளித்த அன்பர்கள்

| நெ. | பெயரும், விலாசமும். | | ரூபாய் |
|---|---|---|---|
| | 'ஞானதான வள்ளல்' | | |
| 1. | திரு. S. கோவிந்தசாமி முதலியார் & திருமதி தனலக்ஷ்மி அம்மாள், ஈரோடு. | ... | 101 |
| 2. | திருமதி தங்கம்மாள் மாரிமுத்து, ஸ்ரீ முருகன் ஸ்டோர்ஸ், திருச்செங்கோடு | ... | 101 |
| 3. | திரு. A. V. தனுஷ்கோடி, 35, M. C, C. தெரு, விருதுநகர். | ... | 100 |
| 4. | திரு. K. N. ராதாகிருஷ்ணன், H. M. ஊ. ஒ. துவக்கப்பள்ளி, தழுதாழை-621103 | ... | 108 |
| 5. | திரு. M. N. ஜெகநாதன், ஷ்ராப் வியாபாரம், சேலம்-2. | ... | 100 |
| 6. | திரு. K. AR. M. RM. முத்து, L.C.E., M.I.S.E. கன்சல்டிங் எஞ்சினியர், காரைக்குடி-1. | ... | 101 |
| 7. | திரு. V. பொன்ராஜ், ரயில்வே காலனி, சென்னை-23. | ... | 101 |
| 8. | டாக்டர் O. G. விஸ்வநாதன், M. D., சேலம்-1. | ... | 100 |
| 9. | திரு. C. பரமசிவம், Prop: செந்தில் டிரேடிங் கார்ப்பொரேஷன், சேலம்-1. | ... | 100 |
| 10. | ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாலயா, கண்டாச்சிபுரம் – 605 701. | ... | 100 |

11. திரு. B. கோபாலகிருஷ்ணன்,
ஜெயநகர், பெங்களூர் – 560 011. ... 103

12. திரு. G. நடராஜன்,
வீரம்மாள் பேக்கரி, சென்னை - 21. ... 93

13. திரு. P. R. பட்டுலிங்கம், 'ஆனந்த பவனம்',
கோபிசெட்டிபாளையம் - 638 452 ... 100

14. Sri. R. K. RAJAGOPAL, T. X. R.
Southern Railway, Mettuppalayam, ... 101

15. திரு. N. C. முத்து,
B. S. T. பஸ் சர்வீஸ், வேலூர் -638 182. ... 102

16. G. ஏகாம்பரம்,
4625, அண்ணா நகர், சென்னை -40. ... 100

17. 'குருபக்தி ரத்ன' திரு. S. துரைசாமி,
144, சுங்கை, கெறங்கான், மலேசியா. ... 100

18. திரு. S. K. கோபால் நாயர்,
Lian Moh Estate, Kedah, Malaysia ... 100

19. திரு. S. K. நாராயணன்,
Lian Moh Estate, Kedah. Malaysia ... 100

20. திருமதி கல்யாணி கிருஷ்ணன்.
135, Kampang, Kedah, Malaysia. ... 100

21. ஸ்ரீ L. R. இராஜாங்கம், ஆசிரியர்,
Batu 3, Kedah, Malaysia ... 100

22. திருமதி பங்காரு சாம்பசிவம்,
ஆத்தூர், சேலம் மாவட்டம். ... 100

23. திரு. P. R. பாண்டுரங்கன் & சன்ஸ்,
ஸ்ரீ ராஜகணபதி சில்க் ஹவுஸ், இராசிபுரம். ... 100

| | | | |
|---|---|---|---|
| 24. | திரு. K. P. இராமசாமி செட்டியார்,<br>ஆண்டவர் ஆயில் மில்ஸ், இராசிபுரம். | ... | 100 |
| 25. | ஸ்ரீ சுவாமி சொருபானந்தா, தலைவர்,<br>சிவானந்தா சாந்தி வனம், ஜெகதலா,<br>நீலகிரி மாவட்டம். | ... | 60 |
| 26. | திரு. V. E. நடராஜன்,<br>வேலூர் - 638 182. | ... | 60 |
| 27. | திரு. M. லோகநாதன்.<br>Development Officer, வேலூர் - 638 182. | ... | 60 |
| 28. | திரு. A. குருசாமி, B. Com.,<br>காரியதரிசி, சாந்தி ஆசிரமம், கோத்தகிரி,<br>நீலகிரி மாவட்டம். | ... | 60 |
| 29. | K. V. ராதாகிருஷ்ணன் செட்டியார்,<br>'நரசூஸ் காப்பி' சேலம் - 1. | ... | 65 |
| 30. | திரு. S. K. S. இராஜாமணி நாடார்,<br>உப்பு வியாபாரம், தூத்துக்குடி. | ... | 60 |
| 31. | திருமதி சிவானந்த விஜயலக்ஷ்மி,<br>மதுரை. | ... | 60 |
| 32. | G. கல்யாணசுந்தரம்,<br>ரயில்வே காலனி, திருச்சி - 4. | ... | 60 |
| 33. | திரு. மு. இராமசாமி, M. A., B. Ed.,<br>உதவித் தலைமை ஆசிரியர்,<br>அரசினர் மேல்நிலைப்பள்ளி, இராசிபுரம். | ... | 60 |
| 34. | M. கோபாலகிருஷ்ணன்,<br>Retd. Highways Divisional Engineer,<br>கிருஷ்ணகிரி. | ... | 60 |

# சத்சங்கமும் ஸ்வாத்யாயமும்

இயற்றியது : ஸ்ரீ சுவாமி சிவானந்தா
தமிழாக்கம் : திரு. R. வரதராஜன், B. A., B. T.

ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்
நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம் |
நிர்மோஹத்வே நிஸ்சலதத்வம்
நிஸ்சலதத்வே ஜீவன்முக்தி : |

உயர்ந்த மகாத்மாக்களின் தொடர்பினுல் ஒருவன் விருப்பு வெறுப்பற்ற நிலையை அடைகிருன். வைராக்கியத்தை அடைகிருன். உலகியல் மனிதர்களின் தொடர்பை அவன் விரும்புவதில்லை. நிர்மோகத்துவ நிலையில் வளர்ச்சி பெறுகிருன். கவர்ச்சி அல்லது மயக்கத்தினின்றும் விடுபடுகிருன். அதனுல் அவன் மனம் நிலைபெற்று, ஒருமைப்பாட்டை அடைந்து பரப்பிரம்மச் சொரூபத்தோடு ஒன்றுபடுகிறது. அதன் பிறகு அவன் முக்தி அல்லது விடுதலையை அடைகிருன்.

— ஆதிசங்கரரின் 'பஜகோவிந்தம்'.

இந்த மாயையைக் கடக்க அல்லது வெற்றி கொள்ள யாரால் முடியும்? தீயவர்களின் தொடர்பை நீக்கி, பெருமனது படைத்தவர்களோடு தொடர்பு கொண்டு, அகங்காரத்திலிருந்து விடுபட்டவனுல்தான் அது முடியும்.

சான்ருேர்களோடு தொடர்பு கொள்வது பெறுதற்கரிய ஒன்ருகும். பெரியவர்களின் கூட்டத்தில் ஒருவன் எவ்வாறு எப்பொழுது தொடர்பு கொள்ள முடியும் என்பதைக் குறிப்பாகக் கூற முடியாது. ஆனுல் அதைப் பெற்றுவிட்டால், அதனுல் ஏற்படும் பயன்களை உறுதியாக அடையலாம்.

பெரியவர்களுடைய தொடர்பை இறையருளிருந்தால்தான் பெறமுடியும்.

— மகரிஷி நாரதரின் 'பக்தி சூத்திரங்கள்'.

ஞானம் அல்லது விவேகம் (பகுத்தறியும் ஆற்றல்) சத்சங்கத்தின் உதவியால்தான் வரும். அதைப் பெறுவதற்குரியவர்கள் என்று இராமபிரானால் கருதப்படுகிறவர்களும் அவர் அருளுக்குப் பாத்திரமானவர்களும்தான் அதை அடைய முடியும்.

மிகவும் மோசமானவர்களும்கூட முனிவர்கள் அல்லது ஞானிகளின் தொடர்பினால் நல்லவர்களாக மாறுகிறார்கள். ஏனென்றால் சத்சங்கத்தின் உதவியால் எப்பொழுதும் நன்மையையும் பேரின்பத்தையும் பெறலாம்.

— துளசிதாசரின் 'இராமசரிதமானஸ'.

முனிவர்களிடமிருந்து ஞானத்தைப் பெற்றுக்கொள். அவர்கள் உன்னுடைய காப்பாளர்கள் (இரட்சகர்கள்). அவர்கள் அறிவுரைகளைப் பின்பற்று. அவர்கள் உனக்கு உதவி, வழிகாட்டி, உன்னுடைய இலட்சியத்தை நோக்கி உன்னை அழைத்துச் செல்வார்கள்.

உன் நிரந்தரமான வீட்டை நோக்கித் திரும்பு. சம்சாரமாகிய பாலைவனத்தில் நீ அலைந்து திரிந்தது போதும். அந்தப் பாலைவனத்தில் சில சோலைகள் இருக்கின்றன. முனிவர்கள்தாம் அச்சோலைகள். அவர்களிடமுள்ள ஞானமாகிய ஊற்றை உன்னால் முடிந்த அளவு பருகி, உன் சொந்த வீடாகிய நீ தோன்றிய இடத்தை நோக்கிப் புறப்படு.

*சத்சங்கம்தான் உயிர்காக்கும் படகு. பகுத்தறியும் அறிவுதான் திசையறி கருவி. விருப்பு வெறுப்பற்ற தன்மைதான் நங்கூரம். ஆன்மாவாகிய கப்பலின் தலைவனே! சம்சாரமாகிய பெருங் கடலில் உன் கப்பலை அச்சமின்றி நடத்திச் சென்று, அழிவற்ற அமர வாழ்வாகிய மறுகரையை அடைவாயாக.*

— சுவாமி சிவானந்தரின் அறிவுரைகள்.

## சத்சங்கம் என்றால் என்ன ?

சத்சங்கம் என்ற சொல், 'சத்', 'சங்கம்' என்ற இரண்டு சொற்களாலான ஒரு சொல். 'சத்' என்பது பரம்பொருளான பிரம்மத்தைக் குறிக்கும். அழியும் பொருள்களுக்குள்ளே அழியாமல் விளங்குவதும், மாயத்தோற்றமாகிய இந்தப் பிரபஞ்சத்தைத் தாங்கி நிற்கும் ஒரே உண்மையுமான பிரம்மத்தின் இயல்பைக் குறிக்கும்.

எங்கும் நிறைந்து, எல்லாம் வல்ல, எல்லா முணர்ந்த இயல்புடைய அந்த ''சத்வ'' குணம் ஈசுவரன் அல்லது பரப்பிரம்மம் எனப்படும். எனவே 'சத்' என்பது ஈசுவரன், பிரம்மம் ஆகிய இரண்டையும் குறிக்கும். ஏனெனில் இந்த இரண்டு சொற்களும் முடிவில் ஒரே உண்மைப் பொருளைத் தான் குறிக்கின்றன.

'சங்கம்' என்பது 'கூட்டம்' அல்லது 'ஒன்று படுதல்' என்று பொருள்படும். எப்பொழுதும் இறைவனோடு தொடர்பு கொள்ளுதல் அல்லது பிரம்மத்தில் நிலை பெற்றிருத்தல் என்பதுதான் 'சத் சங்கம்' என்பதன் பொருள். அவித்தை என்ற அறியாமை இருக்கும் வரை, பிரம்மத்தை நேரடியாக உணர்வது கடினம். ஞானத்தால் அறியாமை

அழியும்போது, உண்மையான இயல்பு தானே வெளிப்படுகிறது. இதுதான் மிகவுயர்ந்த சத் சங்கம்.

இதைத்தவிர, நாம் இறைவனிடம் செலுத்தும் குன்றாத பக்தியினால் இறைவன் மனமகிழ்ந்து, கோபியர்களோடு கண்ணன் விளையாடியதைப் போல் நாம் விரும்பும் உருவத்தோடு நம்மிடையே வந்து திருவிளையாடல் புரிவதாகும். ஆனால் இந்தப் பெரும் பேற்றை அடைவதற்கான வழி 'சத்சங்கம்' அல்லது 'ஞானிகளோடு கூட்டுறவு' எனப்படும். இதில் முதலும் முடிவும் ஒன்றாக இருப்பதால் முடிவின் பெயரே முதலுக்கு ஆயிற்று. பிரம்மத்தை உணர்வதற்கு ஞானிகளின் தொடர்பு உதவுவதால், அது சத்சங்கம் எனப்படுகின்றது, இவ்வகையில் 'சத்சங்கம்' என்பது சத்புருஷர்களோடுகொள்ளும் தொடர்பை குறிக்கின்றது. சத்தியத்தை உணர்ந் தவர்களும், சத்தியத்தை நாடிச் செல்லும் சாதகர்களும் சத்புருஷர்களாவார்கள். அகந்தை, பேராசை, காமம் ஆகியவற்றைத் துறந்தவர்களே சத்புருஷர்கள். சமநோக்கும், சமநிலையோடு கூடிய மனமும், இறைவனிடத்தில் மாறாத பக்தியும் உடையவர்கள் சத்புருஷர்கள். அமைதி, பேரானந் தம், போதுமென்ற மனம், எளிமை, அச்சமின்மை, அடக்கம், ஆற்றல்மிக்க குரல், ஞானம் சுடர்விடும் முகம் ஆகியவற்றைப் பெற்றவர்கள் சத்புருஷர்கள்.

## இறையருள் இருந்தால்தான் சத்சங்கத்தைப் பெறமுடியும்

ஒரு சத்புருஷர் அல்லது முனிவருடன் தொடர்பு கொள்வது மிகவும் கடினமானது. அவர் களைத் தெரிந்து கொள்வதும் அதைவிடக் கடின

மானது. ஒரு ஞானியின் உண்மையான பெருமையை உலகியல் மனப்பாங்குடைய ஒருவன் தன் இயல்பை அடிப்படையாகக் கொண்டு அளவிட முயலுகிறுன். அவன் நினைக்கும் அளவில் அவர் குறைவாக இருப்பாராஞல் போலி சன்னியாசி என்று அவரை ஒதுக்கி விடுகிறுன். அதஞல் அவ்ரை அணுகிஞல் அடையக் கூடிய நற்பயனை இழந்து விடுகிறுன். அப்பொழுதும்கூட அந்த ஞானியின் அருகிலிருப்பதால் அவனுக்கு ஓர் அரிய ஆற்றல் உண்டாவதை அவன் விரைவில் உணருவான். நாரத முனிவர் தம் பக்தி சூத்திரங்களில் கீழ்க் கண்டவாறு கூறுகிறுர். ''உயர்ந்தோரின் தொடர்பைப் பெறுவது மிகவும் அரிது. ஆஞல் அதைப் பெறுவதால் தவருது நன்மை விளையும்''.

நல்லோர் இணக்கம் பெறுவது கடினமான ஒன்ருகும். பெரியோர்களின் சத்சங்கத்தில் ஒருவர் எப்பொழுது, எவ்வாறு சேரமுடியும் என்று உறுதியாகக் கூற எவராலும் முடியாது. ஆஞல் ஒரு முறை அடைந்துவிட்டால், பெரியோர்களின் தொடர்பால் தவருது நன்மை ஏற்படும். பெரியவர்களின் அருள் இருந்தால் நாம் இறைவன் அருளுக்குத் தவருது பாத்திரமாக முடியும் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை. அதாவது தெய்வீக அருளின் மூலமாக இறையருளைப் பெறலாம். இறையருளிருந்தால்தான் பெரியவர்களோடு கூட்டுறவு ஏற்படும். இறைவனுக்கும் அவன் அருளைப் பெற்றவர்களுக்குமிடையே எவ்வித வேறுபாடும் இல்லை.

இறைவனுக்கும் அவனைத் தெளிந்துணர்ந்த அடியவர்களுக்குமிடையே எவ்வித வேறுபாடுமில்லை. இருவரும் ஒன்றே. ஒரு ஞானி கடவுளுக்குச் சமமானவர். ''பிரம்மத்தை உணர்ந்தவர்கள்

பிரம்மமாகவே ஆகிவிடுகிறார்கள்,'' என்று உபநிடதம் கூறுகின்றது. ஒரு ஞானியின் பெருமை பிரம்மத்தினுடையதைப் போன்றே அளவு கடந்ததும் அழிவற்றதுமாகும்.

## இறைவனுக்கும் அடியவர்களுக்குமிடையேயுள்ள தொடர்பு

''நான் எல்லா உயிர்களுக்கும் சமமானவன்; எனக்கு வேண்டியவனோ வேண்டாதவனோ எவருமில்லை. ஆனால் என்னை பக்தியோடு வணங்குபவர்கள் என்னிடத்தில் இருக்கின்றார்கள்; நானும் அவர்களுக்குள்ளே வாசம் செய்கிறேன்,'' என்று கண்ணன் கீதையில் கூறுகின்றார். சூரியனுடைய கிரணங்கள் எல்லாப் பொருள்களின் மீதும் எவ்வித வேறுபாடுமின்றி பட்டாலும், வைரக்கல்லின் முகப்புகளில்தான் சுடரொளி வெளிப்படுகின்றது. ஒருவன் வீட்டில் எண்ணற்ற அறைகள் இருந்தாலும், நன்றாக அலங்கரிக்கப்பட்டுள்ள வரவேற்பறைதான் அவனுக்கு மகிழ்ச்சியூட்டுகிறது. அம்மாதிரியே இறைவன் எல்லாருக்கும் பொதுவாக இருந்தாலும் தூய்மையோடு பிரகாசித்துக் கொண்டு பரிவு, கருணை, தன்னடக்கம், சமநோக்கு, ஞானம் ஆகிய தூய குணங்களான ரத்தினக் கற்கள் ஒளிவீசும் ஞானியின் இதயக் கோயிலில் அவன் வெளிப்படையாகக் காட்சி அளிக்கிறான்.

இறைவனுக்கும் அவன் அடியவர்களுக்குமிடையேயுள்ள உறவு மூன்று வகைகளில் விவரிக்கப்படுகிறது. முதலாவதாக, இருவருக்கும் எவ்வித வேறுபாடுமில்லை. ஏனென்றால் ஒரு ஞானி இறைவனிடமிருந்து வேறுபட்ட வாழ்க்கையுடையவனல்ல இறைவன் திருவுள்ளமே ஞானியின் உள்ளமுமாகும். சூரியனுடைய பிரதிபலிப்பு அதன்

உண்மையான சுடரொளியோடு ஒன்றுகக் கலந்து விடுகிறது. உப்பினுல் செய்த பொம்மை கடல் நீரோடு ஐக்கியமாகிவிடுகிறது. பனித்துளி சுடரொளி வீசும் கடல் நீரில் கரைந்துவிடுகிறது. ஜீவன் இறைவனேடு கலந்துவிடுகிறது. அகந்தையுணர்வு மறைந்துவிட்டால், இறைவனுக்கும் ஞானிக்குமிடையே எவ்வித வேறுபாடும் இல்லை.

மற்ெருரு வகையில் பார்க்கும்போது, இறைவன் அடியவனைவிட உயர்ந்தவன். ஏனென்றுல் அடியவன் அல்லது ஞானி இறைவனை அடைவதற்குரிய வழியே ஆகிருன். ஞானியை தரிசித்தவன் அதனேடு திருப்தி அடைவதில்லை. ''சுவாமி! இறையுணர்வு அடைவதற்குரிய வழியைக் காட்டுங்கள். மிக உயர்ந்ததான புருஷார்த்தம் அல்லது மோட்சத்தை அடைவதற்கு நான் என்ன செய்யவேண்டும்?'' என்று அந்த ஞானியைக் கேட்கிருன். இதனுல் இறைவன் ஞானியைவிட உயர்ந்தவன் என்று தெரிகிறது. பந்தங்களால் கட்டுண்டிருக்கும் ஒருவன் ஒரு ஞானியோடு தொடர்புகொள்ளலாம். ஆனுல் அவருடைய உண்மையான உள்ளத் தெளிவை அவனுல் உணர முடியாது. அந்த உள்ளத் தெளிவு இறைவனிடமிருந்து வேறுபட்டதல்ல. இதை உணராத வரையில் ஞானி என்பவர் அவனுடைய இலட்சியத்தை அடைவதற்குரிய வழியாக அவனுக்குக் காணப்படுவார். உண்மையில் இலட்சியமும் அதை அடைவதற்குரிய நெறி அல்லது மார்க்கமும் ஞானியே ஆவார்.

மார்க்கமும் இலட்சியமும் ஒன்றுக இருக்கின்றபடியால் ஒரு ஞானி இறைவனைவிட உயர்ந்தவர் என்று கருதப்படுகிருர். ''இராமபிரானுடைய அடியவர் இராமரைவிட உயர்ந்தவர் என்பது என்னுடைய உறுதியான நம்பிக்கை,'' என்று துளசிதாசர் கூறு

கின்றூர். ஞானிகள் எல்லோரும் அவ்வாறே கூறுகின்றூர்கள்.

இறைவன் எங்கும் நிறைந்தவஞக இருந்தாலும் குருவின் அருளில்லாமல் அவனைக் காண முடிவதில்லை. ஞானி அல்லது குருதான் அதற்குரிய நெறி. சம்சாரத்திலிருந்து தப்புவதற்குரிய வழி வேறு எதுவும் நிச்சயமாகக் கிடையாது.

ஞானிகள்தாம் இறைவனுடைய நடமாடும் தோற்றங்கள். ஞானியைப் பார்ப்பதும், அவரைப் பற்றித் தியானிப்பதும், அவரையே நினைத்திருப்பதும், அவர் பாதங்களை வணங்குவதும், அவரோடு பேசுவதும், ஆகிய செயல்களால் ஒருவன் தனக்குள்ளே இறையருள் திடீரென்று வெள்ளம் போல் பாய்வதாக உணர்கிறுன். அதஞல் வெகுவிரைவில் மிகவுயர்ந்த ஆன்மீக ஞானத்தின் சிகரத்தை அடைகிறுன்.

''அருமை நண்பா! விண்ணுலகம் முதலான மேலுலகங்கள் அனைவற்றிலும் பெறும் இன்பம் முழுவதையும் தராசின் ஒரு தட்டிலே வைத்து, சத்சங்கத்திஞல் பெறும் இன்பத்தை மற்ருெரு தட்டில் வைத்தால், சத்சங்கமுள்ள தட்டே தாழ்ந்திருக்கும்'' என்று துளசிதாசர் சத்சங்கத்தை மிகவும் புகழ்ந்து கூறுகிறூர்.

சம்சாரமாகிய பெருங்கடலைக் கடப்பதற்குச் சத்சங்கத்தைத் தவிர வேறு எவ்விதமான படகும் கிடையாது. ஒரு சத்புருஷர் அல்லது இறையுணர்வு பெற்ற ஞானியோடு தொடர்பு ஏற்படுத்திக் கொண்டவர் மிகவும் சிறந்த பேற்றைப் பெற்றவர் ஆவார். அவருடைய அடிகளில் குன்ருத பக்தியைச் செலுத்துபவர் அதைவிடப் பெரும்பேறு பெற்றவர்

ஆவார். அந்த ஞானியின் தெளிந்த உணர்வு களோடு கலந்து உறவுகொள்ளும் வாய்ப்பைப் பெற்றவர் அனைவரிலும் மேலான பேறு பெற்றவர் ஆவார்.

ஒரு ஞானியோடு தொடர்பு கொள்ள முடியா விட்டால் உபநிடதங்கள், பகவத் கீதை, யோகவா சிஷ்டம், இராமாயணம், பாகவதம் ஆகிய உயர்ந்த நூல்களைப் படிக்க முயல வேண்டும். புனிதத் தலங்களுக்கு யாத்திரை சென்று இறைவன் புகழைக் கேட்பதிலும், அதைப்பற்றிப் பேசுவதிலும் ஈடுபட வேண்டும். இதுவும் அவனுக்குச் சத்சங்க மாகும். ஒருவன் தான் உள்ளத் தூய்மை அடை வதற்கு உதவும் எதையும் சத்சங்கமாகவே கருத வேண்டும்.

## சத்சங்கத்தின் ஆற்றல்

ஞானிகள், யோகிகள், முனிவர்கள், துறவி கள், மகாத்மாக்கள் ஆகியவர்களின் தொடர் பாகிய சத்சங்கத்தின் பெருமையையும் ஆற்றலையும் சொற்களால் விவரிக்க முடியாது. சத்சங்கத்தில் ஒரு நிமிட நேரம் கொள்ளும் தொடர்பினால் உலகியல் மனப்பாங்குள்ள மக்களிடமுள்ள பழமை யான கொடிய சம்ஸ்காரங்கள் அனைத்தையும் வேரோடு அழித்து விடலாம். முழுமைபெற்ற பெரியோர்களிடமிருந்து தோன்றும் காந்த ஒளி, ஆன்மீக அலை, ஆற்றல் மிக்க எண்ணங்கள் ஆகிய வைகள் உலகியல் மக்களின் மனதில் வலிமையான வசியத்தை உண்டாக்குகின்றன. மகாத்மாக் களுக்குச் செய்யும் தொண்டினால் ஆசைகள் நிறைந்த மக்களின் மனம் வெகு விரைவில் தூய்மை அடைகிறது. சத்சங்கம் மனித மனத்தை அளவு கடந்த உயரத்திற்கு உயர்த்துகிறது. மிகப் பெரிய

பஞ்சுப்பொதிகள் ஒரு சிறிய தீக்குச்சியால் சில கணங்களில் எரிக்கப்படுவதைப்போல, ஆசைகள் நிறைந்த எண்ணங்களும் சம்ஸ்காரங்களும் மகாத்மாக்களின் தொடர்பால் சிறிது நேரத்தில் பொசுக்கப்படுகின்றன. கொழுந்துவிட்டெரியும் வைராக்கியத்தையும் ஆன்மீக விடுதலை பெறுவதற்கான வேட்கைக் கனலையும் தூண்டி விடுவதற்கான சரியான வழி சத்சங்கம்தான்; அதைத் தவிர வேறில்லை.

ஒரு ஆன்மாவிடம் ஞானமும் அன்பும் தோன்றுவதற்கு புனிதமான யோகிகளோடு கொள்ளும் தொடர்பு ஒன்றே போதுமானது. குற்றங்கள் அனைத்தையும் களைந்து அறிவைத் தோற்றுவிக்கும் அரிய ஆற்றலைப் படைத்த சத்சங்கத்தின் உதவியால் குற்றங்கள் அனைத்தும் நீங்கப்பெற்ற ஒருவனிடம் அறிவு தோன்றுகிறது. தீய இயல்புகளால் கறைபட்ட உள்ளம் படைத்த ஒருவன் நல்லவர்களின் உயிரோட்டமுள்ள சொற்களைக் கேட்ட மாத்திரத்தில் தூய்மை அடைகிறான். முடிவில் அவன் இறைவனின் தாமரைத்தாள்களை அடைகிறான். ஆன்மாவைத் தூய்மைப்படுத்தி அதை இறைவனிடம் அழைத்துச் செல்லும் ஆற்றல் நல்லவர்களின் சொற்களுக்கு இருக்கிறது என்ற உண்மை நன்கு விளங்கும்.

## சத்சங்கம் படிப்படியாக இறையுணர்வை அளிக்கிறது

முதலில் தூயவர்களான நல்லவர்களோடு தொடர்பு கொண்டு அவர்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும். அம்மாதிரியான தொடர்பின் காரணமாக தன்னுடைய சிறப்பான இயல்பையும்

மேலான பரம்பொருளின் இயல்பையும் பற்றிய ஞானம் ஒருவரிடம் தோன்றுகிறது. அதன் பின்னர் இவ்வுலகத்திலும் மறுவுலகத்திலுமுள்ள ஒவ்வொன்றின் மீதும் வைராக்கியம் அல்லது முழு வெறுப்பு தோன்றி இறைவனிடம் நாட்டம் ஏற்படு கின்றது. அதுவே பக்தி. பக்தி வலிமை பெற்ற வுடன், அவன் இறைவனுடைய அன்புக்குரியவனு கிறுன். அந்த அன்பின் காரணமாக அவன் இறை வனைச் சார்ந்தவனுக மாறிவிடுவதால் இறைவனை நேருக்கு நேர் காணும் பேற்றை அடைகிறுன்.

விவேகானந்தர் இராமகிருஷ்ண பரமஹம் சரின் சத்சங்கத்தைப் பெற்ருர். ஞானதேவருக்கு நிவிருத்திநாதரின் சத்சங்கம் கிடைத்தது. கோரக் நாதருக்கு மச்யேந்திரநாதரின் சத்சங்கம் ஏற் பட்டது. ஒவ்வொரு பொருளிலும் இறைவனின் தோற்றத்தை உணர்வதும், ஒவ்வொரு முகத் திலும், ஒவ்வொரு பொருளிலும் இறைவனைக் காண்பதும் ஆகிய செயல்களே மிகவும் உயர்ந்த சத்சங்கமாகும். சத்சங்கத்தை அளிக்கும் மகாத் மாக்களும் அதைப் பெறும் உண்மையான அடியவர் களும் வாழ்க. பெரும்பாலும் சத்சங்கத்தாலும், அடியவர்களுடன் பேசுவதாலும் பக்தியுணர்வு தூண்டப்படுகிறது. ஒரு விளக்கு மற்ருெரு விளக்கை ஏற்றுவதுபோல, ஒரு உள்ளமும் மற்ருெரு உள்ளத் தினின்றும் தூண்டுதலைப் பெறுகின்றது. ''ஞானி கள் மெய்மறந்த பக்தியால் என்னை வணங்குகிருர் கள். அவர்கள் மனதை முற்றிலும் என்னிடமே செலுத்தி, அவர்கள் உயிரை என்னிடம் நிலைபெறச் செய்து, ஒருவருக்கொருவர் ஞானவொளியூட்டிக் கொண்டு, என்னைப்பற்றியே பேசிக்கொண்டு, முழு மன அமைதியும் இன்பத்தையும் பெறுகிருர்கள்'' என்று கண்ணபிரான் கீதையில் கூறுகிருர்.

கீழை நாடுகளில் புனிதமான நல்லோர்களை நாடிச்சென்று அவர்களுடைய அறிவுரைகளைக் கேட்டுப் பயன்பெற்று ஆன்மீகக் கனலில், அன்பு, சிரத்தை ஆகிய பொறிகளைத் தூண்டிவிடுமாறு மாணவர்களுக்கு அறிவுரை கூறப்படுகின்றது. மிகவும் உறுதியுள்ள ஆன்மாவினுல் தனித்திருப்ப தால் ஞானம் பெறமுடியும். தொடக்க நிலையில் உள்ளவர்கள் தங்கள் ஆன்மீக வேட்கையை வலிமைப்பெறச் செய்வதற்குக் கிடைக்கும் வாய்ப் புக்களை பயன்படுத்திக் கொண்டு மற்றவர்களோடு தொடர்பு கொண்டு தன் உணர்வுகளை அவர் களோடு பங்கிட்டுக்கொள்ள வேண்டும்.

## தாமாகச் சிந்திக்க முடியாதவர்கள் சத்சங்கத்தைத் தவருமல் நாடிச் செல்ல வேண்டும்

தாமாகவே நல்ல முறையில் சிந்திக்கக் கூடிய வர்களும், சத்விசாரம் அல்லது உயர்ந்த முறையில் எண்ணக் கூடியவர்களும், சத்தியத்தைத் தேடிச் செல்லும் ஆராய்ச்சியில் தம் அறிவைமட்டும் பயன் படுத்தக் கூடியவர்களும், இவ்வுலகில் வெகு சிலரே இருக்கின்றுர்கள். அப்படிப்பட்டவர்கள் தமக்குத் தாமே குருவாக இருப்பதோடு, அவர்களுக்கு வேறு ஆசிரியரும் தேவை இல்லை. அவர்கள் தம்முடைய மிகவுயர்ந்த இறையுணர்வோடு தொடர்புகொண்டு தியானம்செய்வதே அவர்களுக்கு சத்சங்கமாகிறது.

தாமாகவே சரியாகச் சிந்திக்க முடியாதவர் களும் தங்கள் எண்ணங்கள், உணர்வுகள், விருப் பங்கள் ஆகியவற்றை நம்ப முடியாதவர்களும், ஆசை, மயக்கம் ஆகியவற்றை நாடித் தவருன பாதையில் செல்பவர்களுமே மக்கள் கூட்டத்தில் பெரும்பாலானவர்கள். அவர்கள் சரியான வாழ்க்

கையில் செல்வதற்கு அவர்களை வழிப்படுத்த அவர்களுக்கு ஒரு குரு அல்லது ஆசிரியர் தேவை. ஞானியும் நல்லவருமான தங்கள் குருவோடு தொடர்பு கொண்டு அவருக்குத் தொண்டுசெய்து, அவரிடம் நேரடியாக அறிவுரைகளைப் பெற்றுக் கொண்டு, அவர் நன்னடத்தையைக் கவனித்து அதையே பின்பற்றுவதுதான் அவர்களுக்குச் சத்சங்கமாகும்.

அக்கறையுள்ளவனும், கவனமுள்ளவனுமாகிய சாதகன் ஒருவனுல்தான் முனிவர்கள், யோகிகள் அவர்களுடன் கொள்ளும் தொடர்பாகிய சத்சங்கத்தின் உண்மையான மதிப்பை அறிந்து கொள்ள முடியும். உண்மையான சத்சங்கம் சாதகனுக்கு வாழ்க்கையில் ஏற்படும் போராட்டங்களைத் துணிவுடன் சந்திக்கவும், ஆசைகளை வெல்லவும், உள்ளத்தில் ஏற்படும் வேட்கைகளை அழிக்கவும், மனதைத் தூய தெய்வீக எண்ணங்களால் நிரப்பிக் கொள்ளவும் உள்ள வலிமையைக் கொடுக்கின்றது.

முனிவர் அல்லது ஞானியின் தொடர்பு தீயதை நல்லதாக மாற்ற வல்லது. இறைவனிடமும் மறை நூல்களிலும் நம்பிக்கை, இறைவனிடம் பற்று, பக்தி ஆகியவை ஒழுங்காகச் சத்சங்கம் பயில்பவரிடம் படிப்படியாக வளர்ச்சி பெறும். மகாத்மா அல்லது மகா புருஷரிடம் சத்சங்கம் பயில்வதால் ஒரு பாவி கூடக் கடைத்தேறலாம். ஜாகை, மாதை என்ற கொடியவர்கள், இரத்ஞகரன் என்ற கொள்ளைக்காரன் ஆகியவர்கள் சத்சங்கத்தினுல் சாதுக்களாகவே மாறிவிட்டார்கள்.

மனிதனுக்குத் தூய்மையும் ஞானமும் அளிக்கும் சாதனங்களில் சத்சங்கம்தான் மிகவுயர்ந்தது. வாழ்க்கையிலுள்ள துன்பங்கள் அனைத்திற்கும் கைகண்ட ஒரே மருந்து சத்சங்கம்தான். சத்சங்கத்தைப் போல் உணர்வூட்டுவதும், உயர்த்துவதும்,

ஆறுதல் கூறுவதும் வேறொன்றில்லை. சத்சங்கம் தான் வாழ்க்கையின் உயிரோட்டம். சிந்தனையின் அமுதம். ஆன்மாவின் இன்பம். மிகவுயர்ந்த பேரின்பத்தைப் பெறுவதற்குரிய வழி சத்சங்கத்தைத் தவிர வேறொன்றில்லை. சத்சங்கத்தைவிட உயர்ந்தது, இன்றியமையாதது, தவிர்க்க முடியாதது, இன்பம் நிறைந்தது வேறெதுவும் இல்லை. இதுதான் ஒரே வழி. இதைத் தவிர வேறில்லை.

## சத்சங்க இல்லங்கள் தற்போதைய தேவை

சத்சங்க இல்லங்கள்தாம் இப்போதைய இன்றியமையாத தேவை. அநேக மக்கள் அங்கு ஒன்றாகக் கூடலாம். மக்கள் ஒன்று சேர்ந்து இறைவன் நாமத்தைப் பாடும்போது ஒரு ஆன்மீக ஆற்றல் தோன்றுகிறது. அதுதான் சத்சங்கத்தின் பெருமை. உன்னுடைய அறைக்குள் கதவை மூடிக்கொண்டு ஜெபமும், தியானமும் செய்வதால் எந்தவிதமான முன்னேற்றமும் அவ்வளவு வேகமாகக் காண முடியாது. ஆனால் ஒரு சில பேர் ஒன்றாகச் சேர்ந்து சத்சங்கம் ஏற்படுத்திக்கொண்டு ஜெபமும் தியானமும் செய்வீர்களானால் அதனால் தோன்றும் ஆன்மீக ஆற்றலால் எல்லோரும் பயன் பெறலாம். வியத்தகு முறையில் விரைவில் முன்னேற்றம் காணலாம். சத்சங்கத்தில் பங்கு கொள்ளும்போது உலகத்திலுள்ள துன்பமெல்லாம் மறந்துவிடுவாய். நீ முற்றிலும் மாறுபட்ட ஒரு சூழ்நிலையில் இருப்பாய்.

இக்காலத்தில் சத்சங்கம் ஒன்றினால்தான் மனிதன் இயல்பை மாற்றமுடியும். மனிதனுடைய காதுகளில் உயர்ந்த கருத்துக்களை இடைவிடாது முழக்கிக்கொண்டே இருக்க வேண்டும். அப்போது தான் அவன் உள்ளத்தை மாற்றியமைக்க முடியும்.

இக்காலத்தில் வியாபாரத்திலுள்ள நேர்மையற்ற தன்மை காரணமாக எங்கும் கலப்படம் மிகுந்து காணப்படுகிறது. உணவுப் பொருள்களில் கலப்படம் அளவுகடந்து காணப்படுகிறது. மனிதனுக்கு தன்னலம் மிகுந்து கடமையுணர்வு மறைந்து விட்டது. இறக்கும் தருவாயில் உன் மனசாட்சி உன்னைக் குத்தும். இப்பொழுதும் சாகும் தருவாயிலும் அதற்குப் பிறகு எப்போதும் உனக்கு மன அமைதி கிட்டாது. நேர்மையற்ற இயல்பு உன் மனசாட்சியைக் கொன்றுவிடுகிறது. அது தற்கொலையைவிட மோசமானது. எனவே நாணயத்தோடிரு. தூய்மையான உள்ளமும், தெளிவான மனமும் களங்கமற்ற மனசாட்சியும் உடையவனாக இரு. நீ ஏழையாக இருந்தாலும் மகிழ்ச்சியோடு இருப்பாய். நேர்மையுள்ளமிருந்தால் உலகத்திலுள்ள செல்வங்கள் அனைத்தும் உனக்குச் சொந்தமாகும்.

## எங்கும் சத்சங்க இல்லங்களை அமை

வங்கியில் ஏராளமாகப் பணம் வைத்திருந்தால் மட்டும் ஒருவனைப் பணக்காரன் என்று சொல்ல முடியாது. உள்ளத்தில் செல்வம் (உயர்வு) படைத்தவனே உண்மையில் பணக்காரன். ஒவ்வொரு நற்பண்பும் ஒரு கோடி ரூபாய்க்குச் சமம். அறச் சிந்தனையோடு கூடிய உள்ளமுடையவனாகப் பழகிக் கொள். உன் மனைவிமக்களுக்குத் துணிமணிகள் வாங்க வேண்டி ஏராளமாகச் செலவிடுகிறாய். கோவில்கள் கட்டுவதற்கும் சத்சங்க இல்லங்கள் அமைப்பதற்கும் தாராளமாகப் பணத்தைத் தருமம் செய். அவை உலக முழுவதற்குமே சொந்தமான மிகப்பெரிய சொத்துகளாகும்.

உன் தருமத்தினுல் ஒவ்வொரு ஊரிலும் ஒரு கீதா பவனம் இருக்க வேண்டும். அப்போது எவ்வளவு அழகாக இருக்கும்! எங்கும் சத்சங்கம் நடைபெறும். அங்கு மக்கள் தருமத்தைப் பற்றித் தெரிந்துகொள்வார்கள். அவர்கள் மாறுதலடைந்து விடுவார்கள். சமுதாயம் முழுவதுமே மாறுதலடையும். உயர்ந்த கருத்துக்களும், இலட்சியங்களும் மக்கள் உள்ளங்களில் இடம் பெறும். நேர்மையற்ற தன்மை மறைந்துவிடும். தருமம் மேலோங்கும். மக்கள் ''சர்வ பூதஹிதேரதர்''களாக மாறி உலக முழுவதும் ஒரே குடும்பம் என்று எண்ணி, அனைத்துயிர்களின் நல்வாழ்வையும் கருதியிருப்பார்கள்.

உலக முழுவதற்கும் ஒரே சூரியன். ஒரே நிலா என்றிருப்பதைப்போல், மக்கள் அனைவரின் உள்ளேயும் உறைவது ஒரே உயிர், ஒரே உணர்வு, ஒரே ஆன்மாதான். ஆனுல் மாயையின் விளைவால் ஒவ்வொன்றும் வேறுபட்டதாகத் தோன்றுகிறது. தெருக் கூட்டுவோனும், செருப்பு தைப்பவனும் உன் ஆன்மாவைத்தான் தமக்குள்ளே உடையவர்கள். ''இந்த மனிதன் தாழ்ந்தவன், இந்த மனிதன் உயர்ந்தவன்,'' என்று நீ எண்ணுவது மாயையின் விளைவாகத்தான். வேதாந்தம் ஒற்றுமையைப் பற்றிக் கூறுகிறது. எல்லோரும் ஒன்றுதான். இந்த உண்மை உன் உள்ளத்தில் நிறைந்திருக்க வேண்டும். அந்த நிலையை சத்சங்கத்தின் மூலம்தான் அடைய முடியும்.

இம்மாதிரியான மேலான இலட்சியங்களை நீ இடைவிடாது கேட்டு அவைகளைப்பற்றிச் சிந்திக்க வேண்டும். வேதாந்தம் பயிலும் மாணவர்கள், ''மூவகைப்பட்ட காலங்களிலும் உலகம் என்பதே கிடையாது'' என்று சொல்லித் திரிவார்கள். ஆனுல் அவர்கள் சாப்பிடும் பருப்பில் சிறிதளவு

உப்பாவது, பாலில் சிறிதளவு சர்க்கரையாவது குறையுமானுல் மிகவும் சினமடைவார்கள். இந்த மாதிரி வாய்வேதாந்தம் எதற்கும் உதவாது. நடைமுறையில் வேதாந்தத்தைப் பயிலவேண்டும். இடைவிடாத சத்சங்கத்தின் மூலமாகத்தான் நடைமுறையில் உதவும் வேதாந்திகளாக முடியும்.

## உண்மையான வாழ்க்கையின் கொள்கைகளைச் சத்சங்கத்தின் மூலம் கற்றுக்கொள்

உண்மையான வாழ்க்கையின் கொள்கைகளைச் சத்சங்கத்தின் மூலம் நீ கற்றுக்கொள்ள வேண்டும். உண்மையில் வாழ்க்கை என்பது மற்றவர்களுக்காக வாழ்வதேயாகும். வைர மோதிரங்களையும் பஞரஸ் சேலைகளையும் அணிந்து உன்னை அழகு படுத்திக் கொள்கிருய். வைர மோதிரங்களிலும் பஞரஸ் சேலைகளிலும் அழகு இருக்கின்றதா? தருமம் அல்லது சேவை மனேபாவம்தான் உண்மையான வைரம். அழகாக உடையணிந்து ஆயிரம் முறை கண்ணுடியில் பார்ப்பதால் அழகு வந்துவிடுமா? அழகு என்பது உனக்குள்ளே இருக்கின்றது. உன் இதயத்துள்ளே உள்ள அறைகளில் அளவு கடந்த அழகு இருக்கின்றது. ஜ்யோதிஷாமபி தத் ஜ்யோதி தமஸா பரமுச்யதே, ஞானம், ஜ்ஞேயம், ஞான கம்யம், ஹாதிஸர்வஸ்ய திஷ்டிதம், — இந்த உடலை அழகு படுத்துவதிலேயே உன் காலம் முழுவதையும் செலவிடுகிருய். காலையில் ஒரு முறையும், மாலையில் மீண்டுமொரு முறையும் முகக்ஷவரம் செய்து கொள்கிருய். விலை மதிப்பற்ற வாழ்க்கையையும், நேரத்தையும் வீணுகச் செலவிடுகிருய். சத்சங்கத்தின் மூலம் காலத்தைச் சரியான முறையில் செலவிடுவதற்குக் கற்றுக்கொள்ள வேண்டும்.

அனைவரையும் நேசி. எல்லோரையும் அரவணைத்துச் செல். எல்லோரிடமும் இரக்கம் காட்டு. சமுதாயத்தில் நசுக்கப்பட்ட சகோதரர்களுக்கு உதவு. உனக்காக ஏழெட்டு சட்டைகளை வைத்துக் கொள்ளாமல் ஏழைக்கு ஒரு சட்டையைக் கொடு. இவ்வாறுதான் நீ வளர்ச்சியடைய முடியும். அப்போதுதான் அனைவரிடமும் குடி கொண்டுள்ள ஒரே ஆத்மாவைப் பற்றித் தெரிந்து கொள்ள முடியும்.

அனைவரிடமும் நல்லதையே காண முயல். மற்றவர்களிடம் குறைகாணும் தோஷ திருஷ்டியை வளர்த்துக் கொள்ளாதே. உன்னிடமுள்ள தாழ்ந்த இயல்பாகிய தீய மனம் ஒரு மனிதனிடத்திலுள்ள நல்ல பண்புகளைக் கவனியாது அவனிடமுள்ள குறைகளையே காண முயலும் பகுத்தறியும் நோக்கைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். மற்றவர்களிடமுள்ள குறைகளைக் காண முயல்வது மனித இயல்பு. குறைகளில்லாதவர்களிடம் கூட குறைகளைத் திணிக்க முயல்வாய். இந்த இயல்பை சத்சங்கம், நூல்களைப் படித்தல் ஆகியவற்றின் மூலம் அடியோடு நீக்கவேண்டும். மற்றவர்களிடமுள்ள நற்பண்புகளைக் காணவே பயில வேண்டும். அப்போதுதான் மற்றவர்களோடு ஒன்றுபட்டு வாழ முடியும். அவர்களிடமுள்ள நல்ல இயல்புகளை அறிய முடியும். கிரிணம், வெறுப்பு ஆகிய தீய இயல்புகள் உன்னை விட்டு நீங்கும். இந்தப் பழக்கத்தை சத்சங்கத்தின் வாயிலாகப் பயில வேண்டும்.

## தனிப்பட்ட சாதனையும் கூட்டு சாதனையும்

ஐந்தாண்டு காலம் நூல்களைக் கற்றால் கூட அடைய முடியாத ஆன்மீக விளைவுகளை ஒரேயொரு

முறை சத்சங்கத்தில் பெற்றுப் பயனடையலாம். நான் உங்களை ஏமாற்றவில்லை. அபரோக்ஷ அனுபூதி என்னும் சொந்த அனுபவத்தின்மூலம் கூறுகிறேன். கீர்த்தனையை அங்கு பாடும்போது உலகத்தையே மறந்து விடுகிறாய். உலகத்தை மறந்து சரீர உணர்வுக்கு மேலான நிலையைத் தருவது எது? இறைவனுடைய திருநாமத்தைப் பாடுவதுதான்; அதாவது சத்சங்கம்தான் அவ்வாறு செய்தது.

சத்சங்கத்தில்தான் விழிப்புடனிருக்க முடியும். அங்குதான் பாவ சமாதியில் நிலைபெற முடியும். உன்னுடைய அறையில் ஜெபம் செய்ய முயன்றால் வேறுவகையான சமாதியைத்தான் அடையமுடியும்! அதன் பெயர் 'ஆழ்ந்த உறக்கம்'. ஒருவன் மனதை அடக்கியாளவும், அதை அழித்துவிடவும் கூடிய மிகவும் எளிதான வழியைத் தெரிந்து கொள்ள விரும்பினான். அவன் குரு அவனிடம், ''வயிறு நிறைய சோறும் புளித்த தயிரும் உண்டு, நல்ல மெதுவானதும் சுகமானதுமான படுக்கையில் படுத்துக்கொள். காலுக்கும் தலைக்கும் தலையணைகளை வைத்துக்கொள். ஆழ்ந்த பெருமூச்சு விட்டுக் கொண்டு ஓய்வெடுத்துக்கொள். மனதின் எல்லையைக் கடந்து செல்வாய்'' என்று சொன்னார். அதுதான் ஆழ்ந்த உறக்கம். உன் அறையில் தனித்திருந்து ஜெபமும் தியானமும் செய்ய முயன்றால் இந்த நிலைதான் ஏற்படும். சத்சங்கத்தில் இருக்கும் போது நீ விழிப்புடன் இருக்கிறாய். அங்குக் கூடியுள்ள அனைவரிடத்தும் தோன்றுகின்ற ஆன்மீக அலைகளின் உதவியைப் பெறுகிறாய்.

## இல்லறத்தாரும் சத்சங்கமும்

இந்த உலகம் அழகாகவும், இன்பம் நிறைந்தும் கவர்ச்சியோடும் காணப்படுகின்றது. சுவையான

பானங்களும், இனிய கனிகளும், நறுமண மலர் களும், இனிப்புப் பண்டங்களும், மிட்டாய்களும், தேநீர், காபி ஆகியவைகளும், அழகிய பெண் களும், வனப்புமிக்க மலர் வனங்களும் நிறைந்திருப் பதால் மனதிற்கு கவர்ச்சி ஏற்படுகின்றது. பிரித் தறியும் ஆற்றலில்லாத மனிதன் அவற்றைக் கண்டு மயங்குகிறுன். மாயையில் வாழ்ந்து, மாயையைப் பற்றியே பேசிக்கொண்டு தீய வாசனைகள் நிரம்பிய வனுய் இருக்கிறுன். அவன் இவ்வுலகில் அசுர வாழ்க்கையே வாழ்கிறுன்.

ஆனுல் இவ்வுலகில் உண்மையான நிலையைப் பற்றி ஒரு கண நேரம் சிந்தித்துப்பார். இவ்வளவு அழகிய பொருள்களுடன் ஜன்ம, மிருத்யு, ஜரா, வியாதி (பிறப்பு, இறப்பு, மூப்பு, பிணி) என்னும் இடைவிடாத துன்பங்களும் இருக்கின்றன. அழகிய பொருள்கள் உனக்குக் கலப்பற்ற இன்பத்தை நிரந்தரமாகக் கொடுக்கும் என்று எண்ணி அவற்றைப் பின் தொடர்ந்து செல்கிறுய். அதே சமயம் ஒவ்வொரு நாளும் சொத்துக்களின் இழப்பும், உற்ருர் உறவினர்களின் மரணமும், அவ மானமும் தோல்வியும் அனுபவித்துக் கொண்டே இருக்கிறுய். துயரத்தில் மூழ்கியிருக்கிறுய். பெருத்த ஏமாற்றத்தை அடைகிறுய். உலகின் இயல்பைத் தவருக எண்ணிவிடுகிறுய். இது துன்ப மும், துயரமும், மரணமும் நிறைந்த உலகம். இந்த உலகில் புலனுணர்வுப் பொருள்களின் வாயி லாக உண்மையான அமைதி, மகிழ்ச்சி, இன்பம் ஆகியவற்றை அடைய முடியாது. அப்படியானுல் அவற்றை எங்கு பெற முடியும்?

## சாதனை சத்சங்கம் வாயிலாக உன் உண்மை நிலை உணர்ந்து, அழியாத பேரின்பத்தை அடைவாய்.

இந்தப் பெயர்களுக்கும், உருவங்களுக்கும் பின்னே, வேகமாய் மறைந்தொழியும் புலனுணர்வு பொருள்களின் பின்னே, என்றாவது ஒரு நாள் அழிந்துபோகும் இந்த விந்தைக் காட்சியின் பின்னே, பேரானந்தமும், நிரந்தர அமைதியும், ஞானமும், ஒளியும் நிறைந்த சச்சிதானந்தப் பர ப்ரம்மம் இருக்கின்றது. மறை நூல்களைப் படிப்ப தாலும் தியானம், ஜெபம், கீர்த்தனை, சத்சங்கம் ஆகியவற்றின் மூலமும் இந்த ஆத்மாவை அடை வாயாக! அதன்பின் உடலால் ஏற்படும் துன்பங் கள், மனத்தால் ஏற்படும் அடிமைத்தனம், பிறவி யால் ஏற்படும் தளைகள் ஆகியவைகளிலிருந்து விடுதலை பெறுவாய்.

அவித்தை, காமம், கர்மம் ஆகியவை பிறப்பு, இறப்பு என்னும் சக்கரத்தோடு உன்னைக் கட்டுப்படுத்துகின்றன. நீ உன்னுடைய உண்மை நிலையை மறந்துவிட்டாய். உன்னுடைய சச்சிதா னந்த ஸ்வரூபத்தைப்பற்றி உனக்குத் தெரியவில்லை. ஆகையால் இன்பம் என்பது நீ காணும் புலனு ணர்வுப் பொருள்களில் இருக்கின்றது என்று நினைக் கிறாய். அவற்றின்மேல் உனக்கு ஆசை ஏற்படு கின்றது. நீ அவற்றை அடைய விரும்புகிறாய். கர்மம் வேலை செய்யத் தொடங்குகிறது. கர்மத்தி னால் பிறப்பும் இறப்பும் ஏற்படுகின்றன.

எனவே, பிறப்பு இறப்பு ஆகியவைகளிலிருந்து விடுதலை பெற விரும்பினால் ஆசைகள், பற்று, அசுப வாசனைகள் இவற்றிலிருந்து உன்னை விடுவித்துக்

கொண்டு இறுதியாக இந்த அடிப்படையான அறியாமையினின்றும் விடுவித்துக் கொண்டு பிரித்தறியும் தன்மை, விருப்பு வெறுப்பற்ற தன்மை, மனத் தெளிவு ஆகியவற்றை வளர்த்துக்கொள். பதஞ்சலி முனிவரின் அஷ்டாங்க யோகத்தையும் நாரத முனிவரின் பக்தி யோகத்தையும், சங்கராச் சாரியாரின் ஞான யோகத்தையும் இந்த நவீன உலகுக்கு மிகவும் தகுதியான பகவான் கண்ண பிரானின் கர்ம யோகத்தையும் பயில். பிறப்பு, இறப்பு, ஆகியவைகளிலிருந்து விடுதலை பெறுவாய். நீடித்த பேரின்பம் அனுபவிப்பாய். இது தான் உன் இலட்சியம். இதுதான் உன் தர்மம். இந்த இலட்சியத்தை இந்தப் பிறவியிலேயே இவ்வுலகிலேயே அடைவதற்காகத்தான் மனிதப் பிறவியை எடுத்திருக்கிறாய். அந்த இலட்சியத்தை அடைவதற்கு முயலாவிட்டால் உன் வாழ்க்கையை வீணாகச் செலவிடுவதோடு, உனக்குக் கிடைத்துள்ள மனிதப் பிறவியாகிய விலை மதிப்பற்ற பரிசையும் புறக்கணித்துவிடுகிறாய்.

## உலகியற் பொருள்களின் மயக்கத்திலிருந்து சத்சங்கம் உன்னைக் காப்பாற்றுகின்றது.

உன் இலட்சியத்தை மறந்துவிடாதே. அதற்கு சத்சங்கம் இன்றியமையாதது. சத்சங்க வேட்கை என்னும் தீ உன் உள்ளத்தில் அணையாது பாதுகாக்கிறது. சோம்பலில் ஆழ்ந்துவிடாமலும், புலன்களின் வேட்கையைத் தணிப்பதில் ஈடுபடாமலும், உன் இலட்சியத்தை மறக்காமலும் இருக்க அது ஒரு கேடயம்போல் உதவுகிறது. சத்சங்கம் உன் சிறந்த நண்பன். சத்துள்ள ஆன்மீக உணவு. அது உன் பெற்றோர்களைவிடச் சிறந்தது. உன் பெற்றோர்கள் உனக்கு உடம்பைக் கொடுத்தனர்.

ஆனல் சத்சங்கம் உனக்கு ஆன்மீக ஞான ஒளியைக் கொடுக்கின்றது. இறையுணர்வைப் பெறுவதற்கு உரிய அடிப்படையான வழிகளில் சத்சங்கமும் ஒன்று. சத்சங்கமிருக்குமிடத்தில், மகாத்மாக்களும் பெரிய ஞானிகளும் கூடுகிறார்கள். அவர்கள் சத்தியம் அல்லது பரம்பொருளைப்பற்றி உனக்கு நினைவூட்டு கிறார்கள். உலகியல் பொருள்களின் பொய்யான தோற்றத்தினின்றும் உன்னைப் பாதுகாக்கின்றார்கள். கொடிய சம்சாரமாகிய சமுத்திரத்தினின்றும் உன்னைக் காப்பாற்றுகின்றார்கள். அவர்களுடைய சிறப்பான எடுத்துக்காட்டு உனக்கு உணர்வூட்டு கின்றது. உள்ளத்தை உயர்த்தும் அவர்களுடைய உபதேசம் உனக்கு வழிகாட்டியாக அமைகிறது. மனதை அடக்குதல், மனதை ஒருமுகப்படுத்துதல், தியானம் ஆகியவைகளுக்கு நடைமுறைப் பயிற்சி களை சத்சங்கத்திலிருந்து நீ கற்றுக் கொள்ளலாம்.

உலகியல் கடமைகளில் ஈடுபட்டுள்ள இல்லறத் தாருக்குச் சத்சங்கம் இன்றியமையாதது; துறவுப் பாதையில் புகும் ஆன்மீக சாதகர்களுக்கு மிகவும் முக்கியமானது; அனுபவமுள்ள யோகிகளுக்கும் வேதாந்தத்தைப் பயிலும் மாணக்கர்களுக்கும் பயன்தருவது. அது ஆன்மீகமாக இல்லறத்தாரை விழிப்படையச் செய்கிறது. அது ஆன்மீக சாதகர் களுக்கு உணர்வூட்டுகிறது; முதிர்ந்த யோகிகளின் ஆன்மீக உணர்வை நிலைபெறச் செய்கிறது. பெரிய முனிவர்களுக்கும் மகாத்மாக்களுக்கும் சத்சங்கம் இன்பமாகவும், பெருமகிழ்ச்சி தருவதாகவும் உலகத்தினர் அனைவரின் நல்வாழ்வுக்கும் செய்யும் சேவையாகவும் அமைகிறது. மகாத்மாக்கள் தங்கள் ஆன்மீக அனுபவங்களைத் தத்தளித்துக் கொண்டிருக்கும் ஆன்மாக்களோடு பகிர்ந்து கொண்டு, சம்சாரமாகிய வலையில் சிக்கித்தவிப் பவர்களைக் காப்பாற்ற விரும்புகிறார்கள். அவர்கள்

சத்சங்கத்தின் உயிர்போன்றவர்கள். அந்த மாதிரியான புனிதமான பெரியோர்களின் இணக்கத்தைப் பெற்று மகிழ்வதுதான் சத்சங்கத்தை கூட்டுவதன் நோக்கமாகும்.

## உண்மையான சத்சங்க இல்லம் உன் உள்ளத்திலேயே இருக்கிறது

உண்மையில் சத்சங்க இல்லம் என்பது வைகுண்டம், கைலாசம் அல்லது பரமபதமாகும். ஆனால் உண்மையான சத்சங்கம் உன் உள்ளத்திலேயே இருக்கின்றது. சத், மேலான உண்மை, பரம்பொருள், பிரம்மம் என்பதெல்லாம் அங்கேதான் இருக்கின்றது. இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம் ஆகியவற்றால் மனதைக் கட்டுப்படுத்து. பிரத்யாகாரம், தாரணை ஆகியவற்றைப் பயின்று மனதை ஒருமுகப்படுத்து. பின்னர் உனக்குள்ளே இருக்கும் ஆன்மாவைப்பற்றி தியானம் செய். அதன் விளைவாக உன்னையே ஆராய்ந்து கொண்டு, ஆன்மாவின் இயல்புகளைப்பற்றி உள் நோக்கி தீவிரமாகச் சிந்தனை செய்வதால் தினந்தோறும் உன்னுடைய சத்சங்க இல்லத்தில் நீ புக முடியும். இதனால் உனக்கு ஆன்மீகத் தெளிவு ஏற்படும். சத் எனப்படும் எல்லையற்ற பரம்பொருளோடு எப்பொழுதும் ஒன்றுபட்டு இருக்கலாம்.

இதுதான் உன் இலட்சியம். இதை மறந்து விடாதே. மாயை மிகவும் ஆற்றல் படைத்தது. நீ பெருவிருப்போடு இருந்தாலும் இதுவே உன் முதற் கடமை என்பது மறந்து விடும். எனவே சத்சங்கத்துக்கு வந்து ஞானிகளோடும் யோகிகளோடும் தொடர்பு கொள். அவர்கள் உனக்கு

உன் மனதை அடக்கவும் பிராணுயாமம், பிரம்ம விசாரம் ஆகியவைகளையும், புலனின்பப் பொருள் களைவிட்டு உன் மனதை விலக்கவும், மனதை சத்வ குணத்தால் நிரப்பிக் கொள்ளவும் பயிற்சி அளிப்பார்கள்.

உடலோடும் மனத்தோடும் ஒன்றுபடுத்திக் கொள்வதுதான் துன்பங்கள் அனைவற்றிற்கும் காரணம். உண்மையில் நீ சச்சிதானந்த ஸ்வரூபம்; இந்த உண்மையான ஸ்வரூபத்தோடு உன்னை ஒன்றுபடுத்திக் கொள்வதுதான் நிரந்தர அமைதி யும் மேலான பேரின்பமும் ஆகும். அஜோ நித்ய சாஸ்வதோயம் பூரணே:— இந்த ஆத்மா பிறந்த தில்லை, எப்பொழுதுமிருப்பது, புராதனமானது. தியானம், ஜெபம், கீர்த்தனை, பிரார்த்தனை ஆகிய வற்றில் ஒழுங்குடன் இரு. சத்சங்கத்திற்குச் சிறிது காலம் சென்றுவிட்டு, சில நாட்கள் கீர்த்தனை செய்துவிட்டு, பிறகு விட்டு விடுகிறுர்கள். இது மிகவும் வருந்தத்தக்க தவருகும். சாதனையில் ஒழுங்கு எனபதுதான் மிகவும் முக்கியமானது. எதைச் செய்தாலும் ஒழுங்குடன் செய். தியானம் செய்யும் நேரத்தைச் சிறிது சிறிதாக அதிகப் படுத்து. இவ்வுலகிலுள்ள மயக்கும் சக்தி படைத்த பொருள்களைக் கண்டு ஏமாறுதே. உலகியல் சொத்துக்களால் எவரும் நன்மை பெறவில்லை. உனக்கு பாங்கியில் கோடிக்கணக்கான ரூபாய்கள் இருக்கலாம். உன்னிடம் நூற்றுக்கணக்கான கார் களும், டஜன் கணக்கில் பங்களாக்களும் இருக்க லாம். இவைகளால் நீ மன அமைதியைப் பெற முடியாது. ஜெபம், தியானம், கீர்த்தனை, சத் சங்கம் இவற்றில் ஒழுங்காக இருந்தால்தான் மன அமைதியைப் பெற முடியும். ஆன்மாவைப் பற்றிய ஞானம் ஏற்பட்டால்தான் நீடித்த அமைதி ஏற்படும். ஆன்மீகப் பயிற்சியின் மூலமாக உன்

உள்ளத்தில் சத்சங்க பாவத்தை ஏற்படுத்திக் கொண்டு, இறைவனைத் தெளிந்து உணர்ந்துகொள். அதை எதிர்காலத்துக்கு ஒத்திப்போடாமல் இப் பொழுதே செய். இலட்சியத்தை மறந்துவிடாதே.

உபநிடதத்தின் இறுதி வாக்கியத்தை எண்ணிப் பார். தத் த்வம் அஸி. நீதான் அந்த மேலான எல்லையற்ற அழிவற்ற சச்சிதானந்த பிரம்மன். எப்பொழுதும் நாம ஸ்மரணை செய்துகொண்டிரு. வேலை செய்து கொண்டிருக்கும் போதும் விடாமல் ஸ்ரீராம், ஸ்ரீராம் என்று மனதிற்குள் சொல்லிக் கொண்டே இரு. ஸ்ரீராம் என்பது மகாவிஷ்ணுவின் அவதாரம் மட்டுமல்ல. அது எல்லாமுணர்ந்த, எல்லாம்வல்ல, எங்கும் நிறைந்த பரப்பிரம்மமே ஆகும். ஸ்ரீராம் என்று இடைவிடாது தியானம் செய்துகொண்டிரு. நல்லவனாக இரு. நல்லதைச் செய். பெருந்தன்மையோடிரு. அமைதியாயிரு. கொடையுள்ளத்தோடிரு. சத்சங்கம், ஸ்வாத்யாயம், ஜெபம், கீர்த்தனை, தியானம் ஆகியவற்றின் மூலம் ஆன்மீகத் தெளிவைப்பெறு. இறைவன் அருளைப் பெறுவாயாக.

## யார் மகாத்மா ?

ஒரு மகாத்மாவை எப்படி அறிந்துகொள்வது? இது மிகவும் கடினமானது. ஒரு ஷேக்ஸ்பியரை மற்றொரு ஷேக்ஸ்பியரால்தான் அறிய முடியும். ஒரு இயேசுவை மற்றொரு இயேசுவால்தான் அறிய முடியும். சாதுக்களோடும் சன்னியாசிகளோடும் பழகி, பல்லாண்டுகாலம் அவர்களோடு வசித்த ஒருவர் சில முடிவுகளை உணர்ந்தறியலாம். ஆனால் அவர் எண்ணுவதுகூட சரியானது என்று சொல்ல முடியாது. ஞானி ஒருவர்தான் தம்முடைய திவ்ய திருஷ்டி அல்லது தெய்வீகப் பார்வையின் மூலம் ஒரு ஞானியை நேரடியாகக் கண்டறிய முடியும்.

ஒரு சாது உடையணியாமலிருக்கலாம்; தன்னிடம் எதையும் வைத்துக்கொள்ளாமலிருக்கலாம்; அவன் தம் கைகளையே உணவேந்தும் பாத்திரமாகப் பயன்படுத்திக்கொண்டு மரத்தடியிலேயே வாழ்ந்து கொண்டிருக்கலாம்; ஒரு காட்டில் வசிக்கலாம். மிகவும் மோசமான அயோக்கியனுக இருக்கலாம். உலகியல் மனம் உடையவனுக உள்ளும் புறமும் எல்லா வகையான ஆசைகளை உடையவனுக இருக்கலாம். கஞ்சா குடிப்பதற்கு எட்டணு கிடைத்தால் மகிழ்ச்சியோடு கூத்தாடலாம். அவன் மனம் வெளிப் பொருள்களில் நாட்டம் கொண்டு கலக்கம் உடையதாக இருக்கலாம். ஆனுல் சந்தடி நிறைந்த நகரில் இருக்கும் ஒருவர் பகட்டான உடையணிந்து கொண்டும், அறுசுவையான உணவை உண்டு பெரிய பிரபுவைப்போல் வாழலாம். இருப்பினும் அவருக்கு எப்பொருளின் மேலும் பற்றில்லாமலிருக்கலாம். இராமானுஜர் ஆடம்பரங்களுக்கு நடுவில் வாழ்ந்தார். இன்ப வாழ்க்கையைப் பற்றி உபதேசித்தார். ஜனகராஜனுக்கு அரசபோகம் இருந்தது. ஆனுலும் அவர் என்ன சொன்னுர்? ''என் சொத்துக்கு அளவில்லை. ஆனுல் எனக்குச் சொந்தமானது ஒன்றுமில்லை. மிதிலை நகர் முழுவதும் எரிந்து சாம்பலானுலும் எனக்குச் சொந்தமானது எதுவும் எரிந்து போகாது''.

## மகாத்மாவை அறிவதில் இல்லறத்தார் செய்யும் தவறு

ஒரு சாதுவின் தன்மையைத் தீர்மானிப்பதில் இல்லறத்தார் சில தவறுன முடிவுக்கு வருகிறுர்கள். அவர்கள் ஒரு சாதுவின் வெளித்தோற்றத்தை மட்டுமே எண்ணிப் பார்க்கிறுர்கள். கற்றறிந்தவர்கள்கூட இந்த விஷயத்தில் தவறு செய்கிறுர்கள். தற்கால சர்வகலாசாலைப் படிப்பு ஒரு சாது அல்லது

மகாத்மாவின் ஆன்மீக முன்னேற்றத்தை அளவிடுவதற்குப் பயன்படாது. ஆன்மீக வழி முற்றிலும் மாறுபட்டது. உத்தரகாசியில் தேவகிரி சுவாமிகள் யோகவாசிஷ்ட வகுப்புகள் நடத்திக் கொண்டிருந்த போது ஒரு நாள் ஏழாவது பூமிகையிலுள்ள ஞானியின் இயல்பைப்பற்றி விவரித்துக்கொண்டிருந்தார். அதைக் கேட்டுக்கொண்டிருந்த இளைஞரான ஒரு சாது, தாம் மிகவும் உயர்ந்த ஞான நிலையாகிய துரியாதீத நிலையில் இருப்பதாக கற்பனை செய்து கொண்டார். உணவு உண்பதை விட்டுவிட்டார். மலஜலங்களை தம் அறையிலேயே கழித்தார். பதினைந்து நாட்கள் இம்மாதிரியே அவர் இருந்தார். அண்டை வீட்டுக்காரர்கள் அவரைக் காரணம் கேட்டு விசாரித்தபோது தாம் ஏழாவது பூமிகையில் இருப்பதாகக் கூறினார். அறிவாளியான ஒருவன் அவர் மனநிலையைப் பரிசோதிக்க எண்ணினான். காஞ்சுருட்டை இலைகளைக் கொண்டுவந்து அவர் உடம்பில் தேய்த்தான். அதனால் உடம்பில் தேள் கொட்டுவதைப் போன்ற எரிச்சல் உண்டாயிற்று. சாது பலமாகக் கூக்குரலிடத் தொடங்கினார். பின்னர் தம் அறிவீனத்தை ஒத்துக்கொண்டு வழக்கம்போல் உணவு உண்ணத் தொடங்கினார். இந்தக் காலத்தில் பஞ்சாப் ரிஷிகேசம் மற்றும் எல்லா இடங்களிலும் அந்தமாதிரி சாதுக்கள் ஏராளமாக இருக்கின்றார்கள். அந்த சாதுக்களிடம் எச்சரிக்கையாக இருங்கள். அவர்கள் உடலின்மீது நெருப்பை வைத்துப் பார்த்தால் அந்த சாதுக்களின் உண்மையான மனோநிலை வெளிப்படும்.

சாதாரணமாக ஓரிரு மணிநேரம் பேசிக்கொண்டிருப்பதால் ஒரு சாதுவின் சிறப்பான இயல்பை அறிந்துகொள்ள முடியாது. அவரோடு நீண்ட காலம் வசிக்கவேண்டும். அப்பொழுதுதான் அவரைப்பற்றிச் சரியாக யூகித்தறிந்து முடிவுக்கு

வரமுடியும். யானை, குதிரை மற்றும் ஒரு அரசனுக்குரிய விருதுகளையெல்லாம் வைத்திருந்த ஞானிகள் உண்டு. ஆனால் அவைகளால் அந்த ஞானிகள் எவ்வகையிலும் பாதிக்கப்படவில்லை. உலகியல் நடவடிக்கைகளுக்கு நடுவில் அவர்களிடம் ஞான நிஷ்டையும் ஸ்வரூபஸ்திதியும் இருந்தன. இதுதான் ஒருமைப்பாட்டோடு கூடிய வளர்ச்சி. பகவத் கீதையின் சாரம் இதுதான். கண்ணபிரானின் உபதேசத்தின் மையக் கருத்தும் இதுதான்.

மனதில் நிர்வாணம் (தூய்மை) வேண்டும். பற்று, ஆசை, அகங்காரம் ஆகியவற்றை மனதில் இருந்து களைந்துவிடு. நீ எங்கு விரும்பினாலும் அங்கு வாழலாம். நகரம்கூட உனக்கு அடர்ந்த காடாக இருக்கும். கலக்கமடைந்த மனமும், குழப்பமடைந்த இந்திரியங்களும் உடையவனாக இருந்தால் அடர்ந்த காடும் சந்தடி நிறைந்த நகரம் போன்றே உனக்குத் தோன்றும். ஞானம் என்பது முற்றிலும் மனோ நிலைதான். உன்னைப் பற்றி நீ அறிய விரும்புகிறாய். வெளியிலுள்ள தோற்றங்களும் அடையாளங்களும் முக்கியமல்ல. எனவே ஒரு சாதுவின் வெளித் தோற்றத்தை ஆராயாதே. ஒருவன் எதை வேண்டுமானாலும் உண்ணலாம். அவன் விரும்பிய வண்ணம் உடுக்கலாம். அவனுக்கு வசதியுள்ள முறையில் சிகை அலங்காரம் செய்து கொள்ளலாம். இவையெல்லாம் முக்கியமானவை அல்ல. அவருக்குள்ளே இருக்கும் மன நிலையை உற்றுக் கவனி.

## உண்மையான மதம் எங்கே தொடங்குகிறது?

ஒரு பக்தனும், சந்நியாசியும், துறவியும் அவர்கள் விரும்பும் எந்தஉணவையும் உண்ணலாம்.

விரும்பியவண்ணம் ஆடை அணியலாம். விரும்பிய முறையில் தலையலங்காரம் செய்து கொள்ளலாம். அவர்கள் பிராரப்தத்தின்படி பழமோ, இலையோ, நீரோ, உயர்ந்த உணவு வகைகளோ உண்டு வாழலாம். ஆடையில்லாமல் இருக்கலாம் அல்லது விலையுயர்ந்த ஆடைகளை அணியலாம். அவர் மிக உயர்ந்த திதிக்ஷுவாகவோ, தவமுடையவராகவோ இருக்கலாம். ஆனால் இவற்றுக்கும் உண்மையான மதத்துக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை.

ஒருவர் உடலுணர்வு நீங்கி மேலே செல்லும் போது உண்மையான மதம் ஆரம்பமாகிறது. அற்பமான பழக்கங்கள், நடத்தை, தொன்று தொட்டு வரும் வழக்கங்கள் ஆகியவற்றைக் கடந்துநிற்கும்போது உண்மையான மதம் தொடங்குகின்றது. உடலைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பவர்களுக்கு இவை அர்த்தமற்ற சமுதாய பந்தங்கள் அல்லது தளைகள் ஆகும். ஆன்மீக வளர்ச்சிபெற்ற ஒருவருக்கும் இவற்றுக்கும் எந்தத் தொடர்புமில்லை. உண்மையான சந்நியாசி அல்லது யோகி என்பவர் இவற்றுக்கு அப்பாற்பட்டவர். உண்மையில் உயர்ந்த நிலையில் முன்னேற்றம் பெற்றுள்ள ஒருவர் இந்த அடிமட்டத்திலுள்ள சமுதாய அல்லது மத சம்பந்தமான தளைகளுக்கு அடிமையாவார் என்று எவரும் எதிர்பார்க்க முடியாது. உலகியல் மனப்பான்மை படைத்த மக்கள் உணவிலும் உடையிலும் அதிகக் கவனம் செலுத்துவதால் உண்மையான சந்நியாசிகளின் சிறப்பியல்புகளை அவர்களால் நன்கு உணர முடிவதில்லை. அவர்களுடைய வெளித் தோற்றத்தை மாத்திரம் பார்த்து ஏமாற்றமடைகிறார்கள். இறுதியில் அவர்களை நாடிச் செல்வதால் பயனேதும் இல்லை. காரணமில்லாமலே ஒரு வெறுப்பை உண்டாக்கிக் கொள்கிறார்கள். நல்ல வாய்ப்புகளைத்

தவறவிட்டுவிடுவதால் சாதுக்களின் கூட்டுறவால் அதிக பயன்களைப் பெறுவதில்லை. அற்ப விஷயங்களுக்குக்கூட எப்பொழுதும் குறை கூறுகிறார்கள். 'அந்த சந்நியாசி வெங்காயம் சாப்பிடுகிறார். இந்த சாது புகைபிடிக்கிறார். அந்த மகாத்மா முகக்ஷவரம் செய்து கொள்கிறார்' என்று ஏதாவது சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள். இந்த மாதிரி அற்ப விஷயங்களில் கவனம் செலுத்தினால், உங்களுக்கு எவ்வித பயனும் கிட்டாது. பர்த்வானிலுள்ள பெரிய யோகியான திபேதியோகி என்பவர் புகை பிடிப்பதோடு இறைச்சியும் உண்ணுகிறார். அதனால் என்ன? தமஸ உணவைச் சாத்வீக உணவாக மாற்றிக்கொள்ளும் திறமை அவருக்கிருக்கிறது.

## சித்துக்கள் உண்மையான ஆன்மீகத்தின் தேவைகள் அல்ல

மக்களிடத்திலுள்ள மற்றொரு குறை அவர்கள் சாதுக்களின் திறமையை அவர்கள் காட்டும் சித்து விளையாட்டுகளைக் கொண்டு மதிப்பிடுவதாகும், உலகில் சாதாரணமாக சாதுக்களின் சிறப்பையும். திறமையையும் அவர்களின் சித்துக்களின் மூலம் மதிப்பிட விரும்புகிறார்கள். உண்மையில் அது பெருந்தவறாகும். ஒரு சாதுவின் அறிவை இம் மாதிரி மதிப்பிடக் கூடாது. சித்துக்கள் தியானத்தினிடையே விளைவதாகும். அவைகளுக்கும் ஆன்மீகத் தெளிவுக்கும் எந்தத் தொடர்புமில்லை. ஒரு சாது ஆசைகள் அல்லது வேட்கையின் காரணமாக சித்துக்களை மேற்கொள்ளலாம். அப்போது அவர் ஒரு பெரிய இல்லறத்தார் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. சித்துக்கள் ஆன்மீக முன்னேற்றத்துக்கு இடையூறாகும். சித்துக்களிலேயே மூழ்கியிருந்து அதைவிட்டு வெளிப்படாத நிலையிலிருக்கும் ஒருவருக்கு இறையுணர்வு பெறுவது என்பது முடியாத

காரியம். ஆனால் இதனால் சித்துக்களைச் செய்பவர் ஆன்மீகத் தெளிவு பெறாதவர் என்று சொல்ல முடியாது. பல சித்து விளையாட்டுகளைத் தன்னலத்துக்குப் பயன்படுத்தாமல் உலக மக்களின் நன்மைக்காகவே பயன்படுத்திய பலர் இருக்கின்றார்கள்.

ஒரு சமயம் ஒரு சாது இராமகிருஷ்ண பரமஹம்சரிடம் சென்று இரண்டு சித்துக்களைச் செய்து காட்டினார். ஒன்று பிறர் கண்ணுக்குத் தெரியாமல் உலவிவருவது. மற்றது அவர் நடக்கும்போது அவருடைய மலத்துவாரத்தின் வழியே பிரகாசமான ஒளி வெளிப்படுவது. இந்த மனிதர் சில நாட்களுக்குப் பிறகு ஒரு பெண்மணி தனியே இருந்த அறைக்குள் அவர் கண்களில் படாமல் சென்று அவர் மேல் காதல்கொண்டு தம்முடைய ஆற்றலைத் தவறாகப் பயன்படுத்திக் கொண்டார். அதனால் இரண்டு விதமான ஆற்றலையும் இழந்தார். இந்த உலகில் சாதாரண மக்களும் படித்தவர்களும் கூட சாதுக்களை அவர்களிடமுள்ள சித்துக்களைக் கொண்டே மதிக்கிறார்கள். அது மிகவும் மோசமான தவறு என்று உங்களை எச்சரிக்கிறேன்.

## மறை நூல்களை மனப்பாடம் செய்வதால் மட்டும் ஒருவர் யோகியாக முடியாது

மறைநூல்களிலிருந்து மேற்கோள்கள் கூறுவது ஒருவருடைய ஆன்மீக முன்னேற்றத்தைக் குறிக்கும் அடையாளமாகாது. ஒருவர் வேதம், உபநிடதங்கள், பிரம்ம சூத்திரங்கள் ஆகியவற்றை முழுவதும் மனப்பாடமாகச் சொல்லலாம். அதே சமயம் அவர் மிகவும் மோசமான, வெறுக்கத்தக்க அயோக்கியனாக இருக்கலாம். இக்காலத்தில் சில புத்தகங்களைச் சிறிதளவு படித்துவிட்டுப் பெரிய

யோகிகளைப் போன்றும் ஞானிகளைப் போன்றும், ஜீவன் முக்தர்களைப் போன்றும் நடிப்பவர்கள் இருக்கின்றார்கள். ஏட்டுப்படிப்பு மட்டும் இருந்தால் யோகத்தின் பயனை அனுபவிக்க அது உதவாது. ஊக்கம், உற்சாகம், உணர்ச்சிததும்புதல் ஆகியவை மனத்தளவில் இருந்தால் யோகப் பயிற்சிக்கு எந்த வகையிலும் உனக்கு உதவ முடியாது. யோகதர்சனத்திலிருந்து சில சூத்திரங்களை மட்டும் மனப்பாடம் செய்துவிட்டு 'நான் ஒருயோகி' என்று நடிப்பது வெறும் போலி வேடத்தைத் தவிர வேறொன்றில்லை. யோக அப்யாசம் என்பது ஒரு வணிகப் பொருளல்ல. யோகப்பயிற்சியில் பொய்யான முறையில் செய்துகாட்டி இறைவனையும், உன்னையும், பொது மக்களையும் ஏமாற்றுவது மிகப் பெரிய குற்றமாகும். இந்த மன்னிக்க முடியாத ஏமாற்றுவித்தைக்கு எந்தவிதமான பிராயச்சித்தமும் இல்லை. இதற்கு மிக உயர்ந்த தண்டனையைக் கொடுக்க வேண்டும்.

## தீட்சையால் மட்டும் தவசி ஆக முடியாது

மேலும் சாதுக்கள், சன்னியாசிகள் ஆகியவர்களைப்போல் வேடமணிந்து ஹடயோகக் கிரியைகளைப்பற்றி மிக அதிகமாகப் பேசிக்கொண்டு, போலியான சமாதிகளை நடத்திக்கொண்டு இவ்வுலகில் வாழ்கின்றார்கள். ஒருவர் காற்றையும் தண்ணீரையும் மாத்திரம் உண்டு உயிரோடிருக்கலாம். இன்னொருவர் பூமிக்கடியில் ஆறு மாதகாலம் வாழலாம். மற்றொருவர், அக்னி திராவகத்தையும், கண்ணாடித் துண்டுகளையும், விஷத்தையும் உண்டு உயிரோடிருக்கலாம். ஆனால் இவைகளெல்லாம் உடலளவில் பயிற்சி செய்வதால் செய்யக் கூடியவையே தவிர உண்மையான ஒரு சாதுவின் இயல்புகள் ஆகா.

மனித மனம் ஒன்றைப்பார்த்து அப்படியே செயல்படும் இயல்புடையது. சுவாமி கிருஷ்ணாஸ்ரமம் போன்ற பெரியவர்கள் கடினமான தூய வாழ்க்கையை கங்கோத்ரியில் நடத்திஞர்கள். அநேகர் அவர் மாதிரியே நடந்துகொள்ள முயன்று, பெரிய மகாத்மாக்கள்போல் நடிக்கின்ருர்கள். இளைஞர்கள் விவேகசூடாமணியையும் அவதூத கீதையையும் படித்துவிட்டு, அந்த நூல்களில் கூறப்பட்டுள்ளதுபோல் அவதூதர்களாகக் காட்சியளிக்கிருர்கள். ஆஞல் அவர்கள் உள்ளங்களில் எந்த விதமான மாறுதலும் ஏற்படுவதில்லை. மனம் பழைய மாதிரியே விருப்பு வெறுப்புகள், ஆசை, கோபம் ஆகியவற்ருல் நிறைந்திருக்கிறது. எளிய அப்பாவியான மக்கள் இவர்களின் வெளித்தோற்றங்களால் ஏமாற்றப்படுகிருர்கள். திதிட்சை மட்டும் ஆன்மீகத்தின் அறிகுறி அல்ல. சிதாப்பூரின் முன்சீப்பான ஸ்ரீ ப்ரத்யும்ன கேசவர் ஒரு சாதுவைப் பற்றிக்கூறுவார். கோடைக் காலத்தில் கொதிக்கின்ற மணலின்மேல் மணிக்கணக்காக உருளும் அந்தச் சாது அற்ப விஷயங்களுக்காக உணர்ச்சி வசப்பட்டுப் போராடுவாராம். இவைகளெல்லாம் உடலைப் பொறுத்த பயிற்சிகள் தவிர வேறில்லை. திதிட்சை என்பது மனதைப் பொறுத்தது. வைராக்யம் என்பது மனதோடு தொடர்புள்ளது. துறவு அல்லது சன்னியாசம் என்பதும் மனதோடு தொடர்புள்ளதுதான். ஒருவர் எந்தப் பயிற்சியுமில்லாமல் தன் ஆடைகளை ஒருகணத்தில் துறந்துவிட்டு, குளிர் காலத்தில் கங்கோத்ரியில் எவ்வித துன்பமுமின்றி இருக்கலாம்.

திதீட்சையிஞல் மட்டும் விடுதலை அல்லது மோட்சம் அடையமுடியுமாஞல், இருபத்து நான்கு மணி நேரமும் தண்ணீரில் வாழும் மீன்கள்கூட மோட்சமடைய வேண்டும். தலையை மழித்துக்

கொள்வதால் மட்டும் மோட்சமடைய முடியுமா ஞல், ரோமம் கத்தரிக்கப்படுகின்ற ஆடுகள் போன்ற மிருகங்கள்கூட மோட்சமடையவேண்டும். எச்சில் துண்டுகளை உண்டு குப்பை மேட்டில் படுத்துறங் கிஞல் மோட்சம் அடையலாம் என்ருல், நாய்களுக் குக்கூட மோட்சமடைய உரிமை உண்டு. இதஞல் முடிவாகத் தெரிவது யாதெனில் நாம் ஒரு மனித னின் வெளித் தோற்றங்களைக் கண்டு ஏமாருமல், அவருடைய உண்மையான மனநிலையை ஆராய்ந் தறிந்தே தீர்மானிக்க வேண்டும்.

## அப்படி யென்ருல் உண்மையான மகாத்மா யார் ?

சடை முடியும், அனல் கக்கும் பேச்சும் அறிவும் விந்தையான செய்கைகளைச் செய்து காட்டுவதும் ஆகியவற்ருல் ஒருவர் ஞானத்தைப் பெறமுடியாது. ராகத்துவேஷம், அகந்தை, காமம், கோபம் ஆகி யவை எவரிடத்தில் முற்றிலும் அழிக்கப்படுகிறதோ, அவர் இன்பம் அடைவதோடு விடுதலைபெற்ற ஞானி அல்லது ஜீவன் முக்தராவார்.

கலங்காத மனம் உடையவர்களும், பேராசை யற்றவரும், ஆசைகளை வென்றவரும், புலன்களையும், மனதையும் கட்டுப்பாட்டில் வைத்திருப்பவரும், இறைவனிடம் பக்தியுள்ளவர்களும், எதற்கும் ஏக் கம் கொள்ளாதவரும், இன்பத்தையும் துன்பத்தை யும் சமமாக மதிப்பவரும், பற்றற்றவரும் தன்ன டக்கம் நிறைந்தவரும், போதுமென்ற மனமுடைய வரும்தான் ஞானிகளாவார்கள்.

ஒருவரிடத்தில் இரக்கமும் அடக்கமும் இருந் தால் அவர் சாது என்றறிந்து கொள்ளுங்கள்.

மற்றவர்படும் துன்பத்தைக் கண்டு மனம் கசிவார். மனிதனிடத்தில் பாவத்தால் இறுகிப் போன இதயம் உள்ளது. அது உருகத் தொடங்கினுல் அங்கே இறைவன் குடி கொள்வான். சாது என் பவர் பஞ்சதசியைப்பற்றிப் பேச வேண்டியதில்லே. கீதையைப்பற்றி நல்ல விரிவான சொற்பொழி வாற்ற வேண்டியதில்லே. ஒரு பிரம்ம சூத்திரத் தைப்பற்றி மூன்று மணிநேரம் விளக்கம் கூற அவரால் முடியாமலிருக்கலாம். அவரிடமிருந்து ஒரு கவர்ச்சி அல்லது ஆற்றல் தோன்றி உன்னே அவரிடம் ஈர்க்கும். அவரை அணுகும்போது உனக்கு சாந்தியும் (அமைதியும்) மனதில் ஒரு பேரானந்தமும் தோன்றும். அவர் அருகில் செல்லும் போதே உன்னுடைய துன்பங்களும் கவலேகளும் மறைந்து விடும். அவர் பார்வையே உன்னே உயர்த்தி விடும். அவருடைய ஒவ்வொரு சொல்லும் . உன் இதயமாகிய கரும்பலகையில் பதிந்து உனக்கு உணர்ச்சியூட்டும். உன் இயற் கையே மாறிவிடும். உன் வாழ்க்கையில் புதிய சகாப்தம் தொடங்கும். அவ்வளவு ஆற்றல் அவருக்குண்டு. இதுதான் உண்மையான இரக்கம், அடக்கம் ஆகியவற்றின் பெருமை.

## சத்சங்கம் : எவ்வாறு கிடைக்கும் ?

இக்காலத்தில் 'நல்ல மகாத்மாக்கள் இல்லே' என்று இல்லறவாசிகள் குறை கூறுகிருர்கள். இது ஒரு நொண்டிச்சாக்கு. தேவையிருந்தால் சரக்கு கிடைப்பதைப் போன்றதுதான் மகாத்மாக்கள் கிடைப்பதும். உண்மையான தேவை இருந்தால் சரக்கு தானே கிடைக்கும். இது இயற்கையின் தவிர்க்க முடியாத விதி. உனக்கு உண்மையில் வேட்கை இருக்குமாளுல், உன் குரு உன் வாயிற் படிக்கே வந்துவிடுவார். மனம்போல் வாழ்ந்தால்

மனதில் ஆசை நிறைந்து, விரும்பத் தகாத வாசனை கள் புகுந்துவிடும். மேலான தெய்வீக வாழ்க்கை யைப்பற்றி நீ கவலைப்படமாட்டாய். வம்புபேசுவதி லும் வீணான உலகியல் பேச்சுகளிலும் உன் காலத்தை பயனில்லாமல் செலவழிப்பாய். ஆசை, காமம், பெயர், புகழ் இவைகளுக்கு அடிமையாகிவிடுவாய். இதற்கு மேலும், ''எனக்கு சத்சங்கம் கிடைக்க வில்லை'' என்று குறை கூறுவாய். உன்னையே முதலில் குறை கூறிக்கொள். உன் குறைகளை ஒத்துக்கொள். உன் தவறுகளுக்காக மனமாற வருத்தப்படு. பிராயச்சித்தம் செய். பட்டினி கிட. பிரார்த்தனை செய். தனியே அமர்ந்து மனம்விட்டு நன்றாக அழு. முதலில் உன்னைத் தகுதியானவனாக்கிக் கொள். பிறகு என்னிடம் வந்தால் உன்னைச் சரியான பாதையில் செலுத்தி, வழி காட்டி, மேன்மையான நிலைக்கு உயர்த்தக்கூடிய மகாத்மாக் களின் தாமரைத் தாள்களிடம் அழைத்துச் செல் கிறேன். இந்த மகாத்மாக்கள் சரியான தகுதியுள்ள சாதகர்களை அடைவதற்காகக் காத்துக்கொண்டிருக் கிறார்கள். மகாத்மாக்கள் ஏராளமாக இருக்கிறார் கள். உண்மையான சாதகர்கள்தான் மிகவும் குறைவு. ''நல்ல மகாத்மாக்கள் இல்லை'', என்று நீ குறை கூறினால், ''சத்தியத்தை நாடிவரும் சாதகர்கள் இல்லை'', என்று மகாத்மாக்கள் குறை கூறுவார்கள்.

நல்ல பொருள்கள் இவ்வுலகில் குறைவாகத் தான் இருக்கின்றன. கஸ்தூரி, குங்குமப்பூ, ரேடியம், சந்தன மரம், கற்றறிந்தவர்கள், நற்பண் பாளர்கள், வீரர்கள் கொடையாளர்கள் ஆகியவர் கள் எண்ணிக்கை மிகவும் குறைவு. அப்படியிருக் கும்போது முனிவர்கள், யோகிகள், ஞானிகள், பக்தர்கள் ஆகியவர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ ? முதலில் உன்னிடம் தன்னடக்கம்,

பிரம்மச்சரியம், மன அமைதி, விடுதலை வேட்கை, அடக்கம், கீழ்ப்படிதல், தொண்டு மனப்பான்மை ஆகிய தேவையான குணங்களை வளர்த்துக்கொண்டு மகாத்மாக்களோடு தொடர்பு கொள்வதற்கு உன்னைத் தகுதி உடையவனாகச் செய்து கொள்ள வேண்டும்.

## இல்லறத்தார் துறவிகளிடம் நடந்துகொள்ள வேண்டிய முறை

இல்லறத்தாரில் பெரும்பாலோர்க்கு சாதுக்களிடம் நம்பிக்கை இல்லை. நல்ல சாது ஒருவரைச் சந்தித்தாலும் அவருடைய வெளித்தோற்றத்தைப் பற்றிக்குறை கூறுகிறார்கள். அவருடைய பெயர், ஜாதி, மதம், தகுதிகள், உறவினர் ஆகியவற்றைப் பற்றிப் பலவிதமான கேள்விகள் கேட்கிறார்கள். துறவிகளைப்பற்றிய அடிப்படையான கொள்கைகளை அவர்கள் மறந்து விடுகிறார்கள். துறவறம் பூண்டபின் இவைகளை எல்லாம் அவர்கள் மறந்துவிடுவதோடு, இந்த உடம்பைப்பற்றிய உணர்வே இல்லாதவர்களாக மாறிவிடவேண்டும் என்பதை எண்ணிப்பார்க்க மாட்டார்கள். துறவி என்பவர் ஒரு பிராம்மணரோ, சாதுவோ, பேராசிரியரோ, குறிப்பிட்ட சமுதாயத்தின் தலைவரோ அல்ல என்று அவர்கள் உணர்வதில்லை.

இல்லறத்தார் சாதுவிடம் இம்மாதிரி கேள்விகளைக் கேட்கக்கூடாது. தங்கள் சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்வதற்காகத் தத்துவ ரீதியான கேள்விகளைத்தான் கேட்கலாம். அப்பொழுதுதான் சத்சங்கத்தினால் அவர்களுக்குப் பயன் ஏற்படும். உலகியல் மனப்பான்மையுள்ள மக்களின் மனதை ஆன்மீகப் பாதையை நோக்கித் திருப்பி, தீயவையும்

தவருனவையுமான சம்ஸ்காரங்களை முற்றிலும் ஒழித்துவிடவும் சத்சங்கம் மிகவும் எளிதான, விரைவான வழியாகும். சாதுக்களிடையே வாழ்ந்தால், அவர்களோடு இணக்கமே ஆன்மீகக் கல்வியாகும்.

ஒரு சாதுவை மிகவும் அடக்கத்தோடும், மரியாதையோடும் அணுகவேண்டும். அவ்வாறு அடக்கவுணர்வோடு அவரை அணுகிளுல் 'அவர் நிச்சயமாக தெய்வீக ஞானத்தை அருள்வார்.

இல்லறத்தார் பக்தியுணர்வு சொட்டச்சொட்ட கையில் பழங்களுடன் துறவிகளை அணுக வேண்டும். துறவிகளைச் சந்தித்தவுடன் அவர் தரிசனத்தைப் பெறும்போது, வணக்கத்துடனும் அன்புடனும் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்ய வேண்டும். உலகியல் விஷயங்களைத் துறவிகளின் முன்னர் பேசக் கூடாது. கேட்கவேண்டிய கேள்விகளைத் தயாராக வைத்துக்கொள்ள வேண்டும். அவைகள் ஆன்மீகத்தையும் இறைவனையும் பற்றி இருக்கவேண்டும். துறவிகளின் ஆசிரமத்தை அடைந்தவுடன் வேடிக்கையாகக் கேட்பதற்காக முட்டாள் தனமான கேள்விகளைக் கற்பனை செய்துகொள்ளக் கூடாது. காலத்தை வீணுக்கக்கூடாது. இல்லறத்தார் தத்தம் தகுதிக்கேற்ப சிறு காணிக்கைப் பொருளை எடுத்துச் செல்லலாம். துறவிகள் கண்முன் தோற்றமாயுள்ள இறைவன் வடிவங்களாகும். துறவிகளுக்குச் செய்யும் தொண்டைவிட எந்த யக்ஞமும், தொண்டும் உயர்ந்ததல்ல. நம்மை தூய்மைப்படுத்துவதில் அது மிகவும் சிறந்தது. துறவிகளுக்குத் தொண்டு செய்பவர்கள் மிகவும் பேறு பெற்றவர்கள். ஏனென்ருல் விரைவில் அவர்கள் மன அமைதியும் உள்ளத் தூய்மையும் பெறுவார்கள்.

## ஸ்வாத்யாயம் அல்லது புனித நூல்களைப் பக்தியுடன் படித்தல்

உயிருள்ள மகாத்மாக்களோடு சத்சங்கம் நடத்த முடியாவிட்டால், மகாத்மாக்களால் எழுதப் பட்ட நூல்களைப் படிக்கலாம். இது மறைமுகமான சத்சங்கமாகும். விவேக சூடாமணியைப் படிக்கும் போது உண்மையில் சங்கராச்சாரியாரோடு சத் சங்கம் நடைபெறுகிறது. யோகவாசிஷ்டத்தைப் படித்தால் வசிஷ்ட முனிவரோடு சத்சங்கம் உண்டாகிறது.

மாலை நேரத்தில் கோயிலில் அல்லது 'ஒரு அமைதியான அறையில் நான்கு அல்லது ஐந்து பேர் கூடி பகவத்கீதை, உபநிடதங்கள், இராமாயணம், பாகவதம் ஆகிய நூல்களில் ஒன்றை ஓரிரண்டு மணி நேரம் படிக்கலாம். படிப்படியாக உங்கள் மனம் தூய்மை அடையும். ஆன்மீக நெறியில் விருப்பம் உண்டாகும். பெண்களும் இந்த வழியைப் பின் பற்ற வேண்டும்.

## தினசரி படிப்பதற்குச் சிறந்த புத்தகங்கள்

ஒரு பக்தன் பக்தியைப் பற்றிய இலட்சியங்கள் இறைவனுடைய புகழ், இனியதன்மை, லீலைகள் ஆகியவைகளைப்பற்றியவை, முனிவர்களுடைய வரலாறுகள், பக்தியை வளர்ப்பதற்கு உதவும் பயிற்சிகள் ஆகியவற்றைப் பற்றிச் சொல்லும் நூல் களைப் படிக்கவேண்டும். இம்மாதிரி புனித நூல் களைப் படிப்பதால் பக்தி வளர்ச்சியடையும்.

இராமாயணம், ஸ்ரீமத் பாகவதம், நாரா யணீயம், கீதை, விஷ்ணு புராணம், அத்யாத்ம இராமாயணம், துளசி இராமாயணம் (இராம

சரித மானஸ்), விஷ்ணு சஹஸ்ரநாமம், சாண்டில்ய சூத்ரங்கள், சிவ புராணம், தேவி பாகவதம், நாரத பஞ்சரத்னம், பக்தியோகப் பயிற்சி, பக்தி யோக சாரம், பக்தியும் சங்கீர்த்தனமும், பக்தி ரஸாம்ருதம், ஆழ்வார், நாயன்மார் பாடல்கள், தேவாரம், திருவாசகம், தாசபோதம், துக்கா ராமின் அபங்கா, ஞானேஸ்வரி, பக்தி ரசாயன, பக்திரசாம்ருத சிந்து ஆகியவை சிறந்த நூல்கள்.

## மனம் எப்படி மயங்குகிறது?

உலகியற் பொருள்கள் உங்களுக்கு வேண்டும். இருப்பினும் ஒருநாள்கூட தியானத்தையோ கீதை, உபநிடதம், விவேக சூடாமணி ஆகிய ஆன்மீக ரத்தினங்கள் நிறைந்த நூல்களைப் படிப் பதையோ தவரவிடக் கூடாது. கீழ்க்கண்ட ஸ்லோகம் உங்களுக்கு அமைதியை அளிக்கும்.

*விஹாய காமான் ய: சர்வான்*
*புமாம்ஸ்சரதி நிஸ்புருஹா:*
*நிர்மமோ நிர்அஹங்கார:*
*ஸ ஸாந்திம் அதிகச்சதி*

இதை மறக்கக் கூடாது.

மனம் மயங்குகிறது. ''எனக்குச் சொந்தமாக இரண்டு பசுக்களும், முசௌரியில் அழகான மாளிகையும் இருந்தால், நான் மகிழ்ச்சியோடிருப் பேன்'' இவைகளெல்லாம் தாழ்ந்த எண்ணங்கள். காலத்துக்கும், இடத்துக்கும், காரியத்துக்கும் அப்பாற்பட்ட ஒன்றை விரும்பும் நசிகேதஸ் போன்ற மக்கள் இருக்கவேண்டும். சுடாலே, ஜனகர் ஆகியவர்களைப்போன்று, உலகியலில் இருந் தாலும், ஆன்மீக வேட்கை, தியானம், துறவு மனப்பான்மை ஆகியவை இருக்கவேண்டும். நாள்

தோறும் விவேக சூடாமணி, ஆத்மபோதம், தத்வபோதம், பஞ்சதஸி, விசாரசாகர் ஆகிய மேன்மைப்படுத்தும் கிரந்தங்களையும், யோக வாசிஷ்டம் என்னும் அழகிய என்றுமழியாத அத்துவைத வேதாந்த கிரந்தத்தையும் கட்டாயம் படிக்க வேண்டும். இவைகள் உங்களுக்கு மன அமைதியைத் தரும். நிர்மமோ நிரஹங்கார ஸ ஸாந்திம் அதிகச்சதி. அதன்பின் உங்களுக்கு இறையருள் கிட்டும்.

## ஸ்வாத்யாயத்திஞலேற்படும் நன்மைகள்

இராமாயணம், பாகவதம், யோக வாசிஷ்டம், மற்றும் ஸ்வாத்யாயத்திற்காக இதர நூல்கள் ஆகியவற்றை நாள் தோறும் ஒழுங்காகப் படிக்க வேண்டும். கீதையிலுள்ள கருத்துக்களைப்பற்றிச் சிந்தித்து, மனதில் நிலை நிறுத்திஞல் அதுவே அடிப் படை நிலையிலுள்ள சமாதியாகும். கீதை ஸ்வாத் யாயத்துக்கேற்ற மிகச் சிறந்த நூலாகும். அது எல்லா யோகங்களின் சாரத்தையும் வேதங்களின் திரண்ட கருத்தையும் தன்னிடத்தே உடையது. உன் வசதிப்படி நாள்தோறும் அரைமணி முதல் மூன்று மணிவரை இதற்குச் செலவிடலாம். மறை நூல்களைப் படிப்பது க்ரியா யோகம் அல்லது நியமம் ஆகும். அது உள்ளத்தைத் தூய்மைப் படுத்தி, சிறந்தவையும் உயர்ந்தவையுமாகிய கருத்துக்களை மனதில் நிரப்புகிறது.

ஸ்வாத்யாயம் மனதிற்கு உணர்வூட்டி அதை ஆன்மீகத்தின் மிகவுயர்ந்த நிலைக்கு உயர்த்தி மேன் மையடையச் செய்கிறது. ஐயங்களைப் போக்கு கிறது. கெட்ட எண்ணங்களை அடியோடு களைகிறது. மனம் செல்வதற்குரிய புதிய ஆன்மீக நெறிகளை ஏற்படுத்துகிறது. மனம் அலைந்து திரியும் தன்மை

அல்லது விக்ஷேபத்தைத் தடுக்கிறது. மனதை ஒருமுகப்படுத்த உதவுகிறது. ஆரம்ப நிலையில் சவிகல்ப சமாதி அடைய உதவுகிறது. அது மனமென்னும் பசு மேய உதவும் மேய்ச்சல் தரை ஆகிறது. புனித நூல்களைப் படிக்கும்போது அவற்றை எழுதியுள்ள இறையருள் பெற்ற பெரிய வர்களோடு ஒன்றுபடுகிறீர்கள். அவர்களால் உங்கள் உணர்வுகள் தூண்டப்பட்டு பேரின்ப நிலையை அடைகிறீர்கள்.

மகாத்மாக்களின் சத்சங்கத்தை நேரில் பெற முடியாவிட்டால் ஸ்வாத்யாயம் உங்கள் ஐயங்களைப் போக்குகிறது. அலைந்துகொண்டிருக்கும் நம்பிக் கையை உறுதிப்படுத்துகிறது விடுதலை அல்லது மோட்சத்தைப் பெறும் வேட்கையைத் தூண்டி விடுகிறது. ஊக்கத்தையும் அறிவொளியையும் கொடுக்கிறது. இந்த நெறியில் பயணம் செய்து போராடித் தடைகளை வென்ற முனிவர்களின் பட்டியல் ஒன்றை உங்களுக்குத் தருகிறது. இதனுல் உங்களுக்கு உற்சாகமும் ஆற்றலும் உண்டாகிறது. மனதில் சத்வம் அல்லது தூய்மையை உண்டாக்கு கிறது. மனதைத் தூண்டி மேன்மைப்படுத்துகிறது. மனதை ஒருமுகப்படுத்தவும், தியானம் செய்யவும் உதவுகிறது. புதிய சாத்வீக வழிகளை ஏற்படுத்தி, மனது அந்த நெறிகளில் செல்வதற்கு உதவுகிறது.

ஞானிகளும் முனிவர்களும் தத்தம் நூல்களில் கூறியுள்ள அறிவுரைகளை நடைமுறையில் கடை பிடிக்கும்போது, துன்புற்ற உடலின் சோர்வு நீங்கப் பெறுகிறது; புண்பட்ட உள்ளம் ஆறுதல் பெறு கிறது; அறியாமையால் வாழ்க்கையில் ஏற்படும் தீங்குகள் அனைத்தினின்றும் உங்களைக் காப்பாற்று கின்றது. புனித மறைநூல்கள் இடுக்கண் ஏற்படும் சமயங்களில் அவற்றைக் களைந்து ஆறுதல் கூறும் நண்பர்களாகவும், இடையூறு நேரும்போது உற்ற

ஆசிரியர்களாகவும், தவறும் குறையும் நிகழும் போது வழிகாட்டும் ஒளிவிளக்குகளாகவும், தீமை களை நீக்கும் ஆற்றல் மிக்க மருந்தாகவும், உங்கள் தலைவிதியை நிர்ணயிக்கும் கருவிகளாகவும் செயல் படுகின்றன.

ஞானிகள், முனிவர்கள், தத்துவ ஞானிகள், சிறந்த அறிஞர்கள் ஆகியவர்களின் நூல்களைக் கற் றறிந்து ஞானத்தைப் பெறுங்கள். அந்த ஞானத் தின் உதவியால் அறிவியற் கலைகள் எல்லாவற்றின் இரகசியங்களையும் ஆராய்ந்து புலமை பெறு வதோடு, பொருள்களின் உண்மை நிலையை உணர்ந்து, உங்கள் தனித்தன்மையை சத்தியத்தின் மாருத விதிகள் செயல்படும் பல்வேறு முறை களோடு இணைத்துச் செயல்படுங்கள். ஆற்றல், மகிழ்ச்சி ஆகியவை நிறைந்த பெட்டகத்தின் திறவு கோல் ஞானம். ஞானம் எண்ண முடியாத துன்பங் களையும், எண்ணிலடங்காத பாவங்களையும் தீர்த்து, அறியாமையை வேரறுத்து, உங்கள் வாழ்வில் அமைதியானதும் சீரானதுமான இயக்கத்தையும் பூரண விடுதலையையும் அளிக்கிறது.

## தீயோர் இணக்கத்திளுல் விளையும் துன்பங்கள்

தீயவர்களோடு இணக்கம் கொள்வதால் பெரும் தீங்குகள் விளையும். எனவே ஒரு சாதகன் தீயவர் களோடு எல்லா வகையான தொடர்புகளையும் விலக்கவேண்டும். தீயவர்களோடு தொடர்புகொள் வதால் மனதில் தீயஎண்ணங்கள் நிறைய உண்டா கின்றன. இறைவனிடமும் புனித நூல்களிடமு முள்ள சிறிதளவு நம்பிக்கைகூட மறைந்துவிடு கின்றது. ஒரு மனிதன் தொடர்பு கொள்ளும் நண்பர்களின் கூட்டத்திலிருந்துதான் அவன் இயல்பைப்பற்றி அறிய முடிகிறது. ஓரினப்பறவை

கள் ஒன்று சேருகின்றன. இவைகளெல்லாம் அறிவூட்டும் பழமொழிகள். அவை உண்மையான வையும் ஆகும். மாடுகள் மேயாமல் நாற்றங்காலை நன்கு வேலியிட்டுப் பாதுகாப்பதுபோல் புதிய சாதகன் வெளியிலுள்ள தீய சக்திகளினின்றும் தன்னைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். இல்லா விடில் அவன் முற்றிலும் அழிந்துபோவான். பொய் பேசுபவர்கள், சோரம் போகின்றவர்கள், திருடு கின்றவர்கள், ஏமாற்றுகின்றவர்கள், வீண் பேச்சு பேசுகின்றவர்கள், புறம் கூறுபவர்கள், கோள் சொல்பவர்கள் ஆகியவர்களுடன் ஒரு சிறிதும் உறவு கொள்ளாமல் விலகி இருக்க வேண்டும். பெண்களிடம் உறவும், அவ்வாறு உறவு கொள் பவரிடம் வைத்துக்கொள்ளும் தொடர்பும் மிகவும் தீங்கு பயக்கும்.

வில்வமங்கள் ஒருமுறை சிந்தாமணியின் நாட்டியக் கச்சேரியைப் பார்த்தார். அவர் அந்தக் கரணங்கள் முழுவதும் விஷமாயின. கடவுள் பக்தியுள்ள அந்தணரின் நல்ல பண்புள்ள மகனு யிருந்தும், அவருடைய நற்பண்புகள் எல்லாம் மறைந்து விட்டன. அவர் சிந்தாமணியின்மேல் காதல் கொண்டார். அதனுல் அவர் வாழ்வு பாழாயிற்று. இதைப்போன்று ஆயிரக்கணக்கான எடுத்துக் காட்டுகள் இருக்கின்றன. ஆந்திர நாட்டில் பிறந்த வேமன்னரும் முதலில் தீயவரோடு சேர்ந்ததால் கெட்டுப்போனுர். தீயவர்களோடு தொடர்பு கொள்வதைவிடப் பயங்கரமானது எதுவுமில்லை. மனைவி மதசம்பந்தமான எண்ணங் களில்லாமல் உலகியல் பற்றுள்ளவளாக இருப்பா ளானுல், அவளுடைய தொடர்பும் தீயதாக இருக் கும். ஆகையால்தான் இமயமலைச் சாரலிலும், கங்கைக் கரையிலுமுள்ள தனிமையான இடங்களைப் பற்றிப் புனித நூல்கள் உயர்வாகப் பேசுகின்றன.

## தீயவர் கூட்டம் என்பது என்ன?

*தீய சூழ்நிலைகள்: காதல், சினிமா, நாடகம் ஆகியவைகள் சம்பந்தமான அருவருக்கத்தக்க படங்கள், பாட்டுகள், கதைப் புத்தகங்கள் ஆகியவைகளும், மிருகங்கள் இன உறவு கொள்ளும் காட்சியும், மனதில் தீய எண்ணங்களை உண்டாக்கும் சொற்களும்—சுருக்கமாக மனதில் தீய எண்ணங்களை உண்டாக்கும் எதுவும் தீய சகவாசம் அல்லது தொடர்பு ஆகும். தீய இயல்புகளையும், தூய்மையற்ற எண்ணங்களையும் நம் மனதில் தூண்டி விடுபவைகள் 'குசங்கம்' எனப்படும். 'குசங்கம்' என்பது 'சத்சங்கம்' என்பதன் எதிர்ப் பதம் ஆகும். 'தீயவர்களின் தொடர்பு' என்பது அதன் பொருள்.*

*இடம், உணவு, நீர், குடும்பம், அருகிலுள்ளவை, காட்சி, இலக்கியம், குறைகாணுதல், வாழ்க்கை முறை, தியானம் அல்லது வழிபாட்டு நெறி ஆகிய பத்தும் அவற்றின் இயல்புகளுக் கேற்றபடி நமக்கு சத்சங்கமாகவோ அல்லது குசங்கமாகவோ உதவுகின்றன.*

*''நாங்கள் பதினைந்து ஆண்டுகளாகச் சத்சங்கத்தில் இருக்கிறோம். எந்தவிதமான ஆன்மீக முன்னேற்றமும் எங்களுக்கு ஏற்படவில்லை,'' என்று சில சாதகர்கள் கூறுகிறார்கள். அவர்கள் தீயவர்களின் தொடர்பை முற்றிலும் நீக்கவில்லை என்பதுதான் தெளிவாகிறது. செய்தித்தாள்களில் உலகத்திலுள்ள எல்லாவிதமான செய்திகளும் வருகின்றன. எனவே சாதகர்கள் செய்தித்தாள்களைப் படிக்கவே கூடாது. அவைகளைப் படிப்பதால் உலகியல் சம்ஸ்காரங்கள் தோன்றுவதோடு,*

மனதில் உணர்ச்சிபூர்வமான கிளர்ச்சிகளை உண் டாக்கி மனதை வெளியே அலையச் செய்து, இந்த உலகம் உண்மையானது என்ற எண்ணத்தை ஏற்படுத்தி, அதிலுள்ள பெயர்களுக்கும் உருவங் களுக்கும் பின்னேயுள்ள உண்மையை மறக்கச் செய்கிறது.

## நண்பர் என்பவரின் இயல்பு

பத்து குடம் பாலில் சிறிதளவு படிக்காரம் போட்டால் பால் முழுவதும் கெட்டுப் போகிறது. பத்து வருட சத்சங்கத்திலுல் ஏற்பட்ட நல்ல பயன் கள் ஒரு சில நிமிட கால தீயவர் தொடர்பால் அழிந்து விடுகின்றன. தீய இணக்கம் இறையன் புக்கு எதிரி. தீய இணக்கத்தைக் கைவிடுங்கள். சத்சங்கம் அல்லது முனிவர்களின் தொடர்பை மேற்கொள்ளுங்கள்.

நண்பர் என்பவர்கள் எதிரிகள் ஆவார்கள். இந்த பிரபஞ்சம் முழுவதிலும் தன்னலமற்ற நண்பன் ஒருவனைக்கூடக் காணமுடியாது. விழிப் புடன் இரு. வீண் பேச்சு பேசவும், உன் நேரத்தை வீணுக்கவும் நண்பர்கள் உன்னிடம் வருவார்கள். உன்னைக் கீழே தள்ளி, உலகியல் தன்மையுடைய வணுக்கப் பார்க்கிருர்கள். அந்த மாதிரி நண்பர் களின் அழகான பேச்சில் மயங்கிவிடாதே. ஈவிரக்க மின்றி அவர்கள் தொடர்பை நீக்கிவிடு. எப்பொழு தும் தனித்திரு. உன் உள்ளத்தில் வாழும் அமரத் தன்மை படைத்த நண்பனையே நம்பு. உனக்கு வேண்டியது எல்லாம் அவன் தருவான். நேரடியாக மகாத்மாக்களின் சத்சங்கத்தைப் பெற முடியா விட்டால், தெளிவு பெற்ற ஞானிகள், முனிவர்கள் பாகவதர்கள் ஆகியவர்கள் எழுதிய நூல்களோடு மறைமுகமான சத்சங்கத்தை ஏற்படுத்திக்கொள்.

## சத்சங்கத்தை நடத்துவது எப்படி ?

சன்னியாசிகளுக்கு ஒரு பேச்சு.

ஹரி ஓம்! பிரம்மத்துக்கு வணக்கம்! ஸ்ரீ சங்கரருக்கும் மகா புருஷர்களுக்கும், சன்னியாசிகளுக்கும் வணக்கங்கள் !

சன்னியாசி அல்லது துறவி என்பவர் உடல் உணர்வையும் தன்னலம், வாசனைகள், அகங்காரம், அபிமானம் அல்லது பற்று ஆகியவற்றையும் துறந்தவர். பிரம்மதேவரின் நான்கு குமாரர்களான சனகர், சனந்தனர், சனத்குமாரர், சனத்சுஜாதர் என்பவர்கள் தூய நிவிருத்தி மார்க்கத்தின் முன்னோடிகள். துறவு நெறியின் மூதாதையர்கள் அவர்கள்.

### காலப் போக்கு

உலகத்திற்கு, பொருளாதாரம் இனம், சமுதாயம், அரசியல், மனம், தொழில் துறை, ஆன்மீகம் ஆகியவை தொடர்பான முன்னேற்றங்கள் தேவையாக இருக்கின்றன. ஆன்மீகத் துறையை ஒருபோதும் மறக்கக் கூடாது. அது தான் அடிப்படையானது. முதலும் முடிவும் அதுவே. ஆனால் இக்காலத்தில் கர்மயோகத் துறையிலுள்ள தலைவர்கள் செயலை மட்டுமே வற்புறுத்திக் கூறுகிறார்கள். வாழ்க்கையின் ஆன்மீக நெறியை முற்றிலும் புறக்கணித்து விட்டார்கள். பல நிறுவனங்களில் உள்ள துறவிகள்கூட சமூக சேவை ஒன்றை மட்டும் செய்கிறார்கள். சில துறவிகளிடத்தில் கல்வியறிவுமட்டும் ஏராளமாக இருக்கின்றது. அதனால் சில சமயங்களில் அவர்களை எவரும் மதிப்பதில்லை. அவர்களும் வாழ்க்கையில் செய்யவேண்டிய தியானமாகிய பகுதியைப் புறக்

கணித்து விட்டார்கள். மக்களின் மனதில் ஒரு நிலையான எண்ணத்தை அவர்களால் உண்டாக்க முடியவில்லை. ஏனெனில் உண்மையான ஆன்மீகப் பொருள் அல்லது ஆன்மீக வலிமை அவர்களுக்குள்ளே இல்லை.

ஆன்மீக புருஷர்களும், யோகிகளும், ஞானிகளும், துறவிகளும் மேடையில் வால் நட்சத்திரத்தைப் போன்றும், கார்த்திகைப் பிறையைப் போன்றும், இயேசுவைப் போன்றும் சிறிது காலம் தோன்றி, ஆற்றல் முழுவதையும் பொழிந்து, ஏராளமான பணியைச் செய்துமுடித்து மறைந்து விட வேண்டும். அநேக நாட்கள் ஆன்மீக வகுப்புகள் நடத்துவதும், ஆசிரமங்களை ஆரம்பிப்பதும் இளைய துறவிகளின் வேலை. அனல் கக்கும் ஆற்றல் மிக்க துறவிகளின் மனநிலைக்கு அது பொருந்தாது. கங்கை நதி வருடத்தில் நான்கு மாதங்கள் வெள்ளப் பெருக்கெடுப்பதுபோல், அவர்கள் ஆன்மீக வெள்ளம் என்ற தேவாமிர்தத்தை உலக முழுவதும் வெள்ளம்போல் சிறிது காலம் மட்டும் பெருக்கெடுத்து ஓடச் செய்வார்கள்.

## வசதியான வாழ்க்கையின் கவர்ச்சி

எந்தத் துறவி அல்லது இல்லறத்தானும் தன்னுடைய சொந்த வாழ்க்கையின் வசதிக்காக ஓர் ஆசிரமத்தைத் தொடங்கக் கூடாது. பல துறவிகள் ஆசிரமத்தைத் தொடங்கும்போது — அதாவது தாங்கள் ஏழையாக இருக்கும்போது — தூய்மையாக இருக்கிறார்கள். அவர்கள் செல்வம் சேர்ந்த பின் — அநேக ஆதரவாளர்களும் பக்தர்களும் சேர்ந்தபின் — தன்னலமற்ற சேவை சிறிது சிறிதாக மறைந்து உள்ளத்தில் தன்னல நோக்கங்கள் தோன்றுகின்றன. ஆசிரமத்தைத் தொடங்கியதன்

நோக்கம் மறைந்து விடுகிறது. அது செல்வம் சேர்க்கும் நிறுவனமாகிறது. அதனிடம் மக்களுக்குக் கவர்ச்சி இல்லை. நிறுவனத் தலைவர் வைராக்கியமும் முழுத் துறவறமும் நிறைந்த வாழ்க்கையை நடத்தினால் அந்த ஆசிரமம் நிரந்தர சமாதானமும், பேரின்பமும், மகிழ்ச்சியும் நிறைந்த மையமாக விளங்கும். அந்தமாதிரி ஆன்மீக ஆற்றல் படைத்த மகான்களைத் தலைவர்களாகக் கொண்ட ஆசிரமங்கள்தான் உலகுக்குத் தேவை.

சில துறவிகள் எட்டிக் கொட்டையை உண்கிறார்கள். இரண்டு ஆண்டுகளில் 122 கொட்டைகளை உண்டு, இலகு சித்தாந்த கௌமிதியையும் நியாயத்தையும் மூன்றாண்டுகள் படித்துவிட்டு, தாங்கள் உண்மையான சித்தர்களாக மாறிவிட்டதாக எண்ணிக்கொண்டு உலக மக்களிடையே தடையின்றிப் பழகுகின்றார்கள். இது ஒரு பெருந்தவறாகும். எட்டிக் கொட்டையால் ஆண்மையற்ற தன்மை உண்டாகிறது. அது பிரம்மச்சரியத்திற்கு ஏற்றதல்ல. அவர்கள் விரைவில் வீழ்ச்சி அடைவார்கள். அதற்கு ஒரு சிறிதும் ஐயமில்லை சிறந்த ஞானிகளும், யோகிகளும் கூடக் கவனமாக இருக்க வேண்டும். உலக மக்களுடன் எவ்வித வேறுபாடின்றியும், ஒழுங்கின்றியும் பழகக் கூடாது. மீன்களின் இனச் சேர்க்கையைக் கண்ட முற்றும் துறந்த முனிவர் ஒருவருக்குக் கிளர்ச்சி ஏற்பட்டது. பெண்களின் கைவளைக் குலுங்கும் ஓசை, வண்ணக் கரையுள்ள துணிகள் ஆகியவைகூட மனதில் கிளர்ச்சியை யூட்டுகின்றன. அவைகளுக்கான தனிப்பட்ட தூய்மையற்ற தொடர்புகள் இருக்கின்றன. காமம் மிகவும் ஆற்றல் உள்ளது. மாயை விந்தையானது. சாதகர்களே! எச்சரிக்கையுடன் இருங்கள்.

கட்டுப்பாடற்ற இளஞ் சாதகர்களும், பிரம்ம சாரிகளும், துறவிகளும் சத்சங்கம் என்ற பெயரால் இல்லறவாசிகளோடு நெருங்கிப் பழகச் செய்வதற்குக் காரணம் அவர்களுடைய நாக்கும், சுவையுணர்வும்தான். சாதகர்களே! உங்கள் நாவைத் திருப்தி செய்வதற்காகவா உங்கள் பெற்ருேரையும், பதவியையும், சொத்தையும் துறந்துவிட்டு துறவறத்தை மேற்கொண்டீர்கள்? அல்லது ஆன்மீகத் தெளிவு பெறுவதற்காகவா? முதலில் சொன்னதால் உலகில் செல்வத்தை சேர்த்து நன்ருக வாழ்ந்திருக்கலாம். துறவறத்துக்கு இழுக்கைத் தேடாதீர்கள். நாக்கைக் கட்டுப்படுத்த முடியாவிட்டால் காவி உடையைத் துறந்துவிட்டு, உலகுக்கே திரும்பிச் சென்று, ஏதாவது வேலே செய்து, செல்வத்தைச் சேர்க்கலாம். கர்மயோகத்திஞல் வளர்ச்சி பெறுங்கள். நாக்கை அடக்காமல், மனதை அடக்க முடியாது.

ஒருவர் காவி உடையை அணிந்ததும், வாழ்க்கையின் உயர்ந்த நெறியில் சேர்ந்துள்ளதையும், தனக்கு மிகவுயர்ந்த பொறுப்பு ஏற்பட்டுள்ளதையும், உலகத்துக்கு ஓர் ஆன்மீக குருவாகவும், தலேவராகவும் ஆகப் போகிறதையும், எண்ணிப் பார்க்கவேண்டும். மேலான தெய்வீகப் பண்புகள் எல்லாவற்றையும் பெறுவதற்கும், தூய்மையும் வைராக்கியமும் நிறைந்த இலட்சிய வாழ்வை நடத்தவும் தன்ஞல் முடிந்த அளவு முயற்சி செய்ய வேண்டும்.

## இதுதான் சத்சங்கமா?

சத்சங்கம் இக்காலத்தில் மோசமான நிலேக்கு வந்துவிட்டது. மனத்திற்கு மகிழ்ச்சியைக் கொடுத்து அதன் சோர்வைப் போக்கும் பொழுது

போக்காக மாறிவிட்டது. துறவிகளும் இல்லறத்தாரும் மாலை வேளையில் ஒரு மணி நேரம் வேதாந்தப் பேச்சுக்களோடு வீணை வம்புப் பேச்சு, அரசியல், அவதூறு, புறஞ்சொல்லுதல், கோள் சொல்லுதல், அற்பத்தனமான கேலி பேச்சு ஆகியவைகளைக் கலந்து சத்சங்கம் என்ற பெயரில் நடத்தப்படுகிறது. சத்சங்கம் நடத்தும் துறவி, அதைக் கேட்கும் மக்கள் ஆகிய இருபாலரின் மனமும் சத்சங்கத் தொடர் நடந்து பல ஆண்டுகளுக்குப் பிறகும் பழைய நிலையிலேயே இருக்கின்றது. அதனால் மேன்மையோ ஆன்மீக முன்னேற்றமோ அடைவதில்லை.

சாதுக்களும் துறவிகளும் உலகில் நடமாடும் போது வைராக்யம் நிறைந்த உன்னதமான தூய வாழ்க்கைக்கு எடுத்துக் காட்டாக இல்லற வாசிகளின் முன் நடந்து காட்டவேண்டும். இல்லற வாசிகளிடமிருந்து தங்கள் வாழ்க்கைக்கு மிகவும் அவசியமான பொருள்களை மட்டுமே பெற்றுக் கொள்ளவேண்டும். அவர்களோடு தாராளமாகக் கலந்து பழகக் கூடாது.

ஊருக்கு வெளியேயுள்ள தனித்த ஓரிடத்தில் தங்க வேண்டும். அவர்கள் ஆன்மீக வகுப்புகளை உரிய முறையில் நன்றாக நடத்த வேண்டும். இடையில் உலகியல் விஷயங்களைப்பற்றிப் பேசக் கூடாது. நிறைய கதைகளைச் சொல்லி அதனால் அளவுக்கதிகமாகச் சிரிக்கத் தூண்டக் கூடாது. வேடிக்கையாகப் பேசக்கூடாது. ஓர் அமைதியான உயர்ந்த சூழ்நிலை இருக்க வேண்டும். கேட்பவர்கள் சிலை போன்றிருக்க வேண்டும். அங்கே நிசப்தமாக இருக்கவேண்டும். அப்பொழுதுதான் இல்லறத்தவர்களுக்கு கருத்துக்கள் புரியும். அதன் பிறகு சத்சங்கத்தினால் தங்களுக்கு ஏதோ பயனிருக்கின்றது என்று உணர்வார்கள்.

## உணவை நாடும் பறவைகள்

இல்லறத்தவர்களிடமிருந்து பல பொருள்களை அடிக்கடி கேட்க ஆரம்பிக்கும்போது, ஒரு துறவி தமக்கு அவர்களிடமுள்ள மதிப்பையும் செல்வாக்கையும் இழக்கிறார். அவர் அந்த இடத்தைவிட்டு உடனே நீங்க வேண்டிய அவசிய மேற்படுகிறது. சில வெட்கமற்ற துறவிகள் மாதக் கணக்கில் இல்லறவாசிகளிடம் ஒட்டுண்ணிபோல் ஒட்டிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களை வயிற்றுப் பிழைப்பை நாடுபவர்கள் என்று கூறலாம். அவர்கள் உண்மையான துறவிகளல்ல. மக்கட் தொகைக் கணக்கு எடுக்கும் அதிகாரிகள் தங்கள் அறிக்கைகளை அனுப்பும்போது கவனமாக இருக்கவேண்டும். மேற்கூறிய துறவிகளை, 'சாதுக்கள் அல்லது துறவிகள்' என்ற தலைப்பின்கீழ் சேர்க்கக்கூடாது. அவர்கள் பசுந்தோல் போர்த்த புலிபோல, காவி உடை அணிந்து பிச்சை எடுப்பதையே தொழிலாகக் கொண்டவர்கள். உண்மையான துறவிகளைப் பற்றிய சரியான கணக்கு இருக்க வேண்டும். சாதுக்களின் எண்ணிக்கை 74 இலட்சம் என்று அதிகப்படுத்திக் காட்டுவதால் என்ன பயன்? தங்களுக்கும், தங்கள் நாடு முழுவதுக்கும் பயனுள்ள பண்பட்ட துறவிகள் 2000க்கும் மேல் காணமுடியாது. உண்மையான சாது அல்லது துறவி ஒருவர் சூரியனைப் போன்று சுடரொளி வீசுபவர். அவர் இரவும், பகலும் எந்நேரமும் பிரகாசித்துக் கொண்டிருப்பார்.

துறவி அல்லது சாது ஊரூராகச் சென்று மேடைப் பிரசங்கம் செய்வதைவிட தம்முடைய குடிலின் வாயிலிலேயே உருப்படியானதும் திறமையானதுமான வேலையை அதிகமாகச் செய்யலாம். ஒரு பூ மலரும்போது தேனீக்களுக்கு அழைப்பு அனுப்புவதில்லை. தேனீக்கள் தாமாகவே வரு

கின்றன. அம்மாதிரியே துறவிகளை நாடி சாதகர் கள் கூட்டம் கூட்டமாக அவருடைய வாயிலுக்கே வருவார்கள். துறவிகள் ஊரூராகச் சென்று விளம் பரம் செய்து கொள்ள வேண்டியதில்லை. மேடைப் பேச்சுக்களால் அரைமணி நேரத்திற்குள் கிளர்ச்சி ஏற்படும். கூட்டத்தில் மூலைக்கு மூலை கூக்குரலும் சண்டையும், சச்சரவும், கைத்தட்டலும், ''கேளுங்கள் கேளுங்கள்'' என்ற சத்தமும் உண் டாகும். உண்மையில் தகுதியுள்ளவர்களே துறவி களை நாடி அவர்களுடைய குடில்களுக்குச் செல்வார் கள். துறவிகளுடைய அறிவுரைகள் இந்தச் சாதகர் களின் உள்ளத்தைத் துளைத்துக்கொண்டு செல்லும். சாதகர்களுக்குப் பயிற்சி அளிப்பதே துறவிகளின் தலையாய கடமை. அதனால் ஒவ்வொரு சாதகனும் ஆன்மீக மையமாகவும், இன்பம், அமைதி, ஞானம் ஆகியவற்றைப் பரப்பும், ஒலி, ஒளிபரப்பும் மையங்களாகவும் மாறிவிடுவார். துறவி இடம் விட்டு இடம் செல்வதால் காலம் வீணாகிறது. அவரைப்பற்றித் தெரிந்துகொள்ள எல்லாவிதமான மக்களும் அவரைச் சந்திக்க வருகிறார்கள்.

உண்மையான துறவிகள் உலகுக்குக் கலங்கரை விளக்கங்களாகவும், வழிகாட்டும் விளக்குகளாக வும் விளங்குவார்கள். கடலில் வெகு தூரத்தில் வந்துகொண்டிருக்கும் கப்பல்களுக்கு கலங்கரை விளக்கம் தன் ஒளியைக் காட்டுவதுபோல், தூர தேசத்தில் அறியாமை இருள் என்னும் சேற்றில் மூழ்கித் தவித்துக் கொண்டிருக்கும் மக்களுக்குத் தங்கள் தெய்வீக ஒளியைப் பரப்புகிறார்கள். துறவி களால் உலகத்தையே மாற்ற முடியும்.

முற்றும் துறந்து, சத்தியத்தின் பாதையில் நடக்கும் துறவிகளின் புகழ் ஓங்குக! பிரம்ம நிஷ்டையாகிய தம்முடைய ஸ்வரூபத்திலேயே

நிலைத்திருக்கும் துறவிகள் வாழ்க! ஆன்மீக ஞானத்தை நாடெங்கும் பரப்பிவரும் பரிவ்ராஜக ஆசார்யர்களும் பிரம்ம வித்யா குருக்களும் வாழ்க! அவர்களுடைய ஆசிகளை நாம் எல்லோரும் பெறுவோமாக!

## சில விளக்கக் கதைகள்

### 1. விசுவாமித்திரரும் வசிஷ்டரும்

விசுவாமித்திர ரிஷிக்கும் வசிஷ்ட ரிஷிக்கும் ஒரு சமயம் ஒரு தர்க்க மேற்பட்டது. விசுவாமித்திரர் ஒரு பெரிய தவசி. அவர் தவத்தின் வலிமையால் திரிசங்கு மன்னனுக்கு மூன்றுவது உலகையே உண்டு பண்ணினர். ''உலகத்திலுள்ள எல்லாவற்றிலும் தவம்தான் மேலானது,'' என்று அவர் வசிஷ்டரிடம் சொன்னர். வசிஷ்டர் அதை மறுத்து, ''சத்சங்கம் தவத்தைவிட மேலானது,'' என்ருர். அதைப்பற்றி பிரம்மாவின் அபிப்ராயத்தைத் தெரிந்துகொள்ள அவரிடம் போய் விஷயத்தைச் சொல்லி அவருடைய முடிவான தீர்ப்பு என்ன வென்று கேட்டார்கள். ''படைக்கும் தொழிலில் நான் ஈடுபட்டிருக்கிறேன். அதனல் எனக்கு நேரமில்லை. சிவபெருமானிடம் செல்லுங்கள். அவருக்கு நிறைய அவகாசம் இருக்கின்றது. அவருக்கு இப்பொழுது ஒரு வேலையுமில்லை. ஊழிக் காலத்தில்தான் அவருக்கு வேலை,'' என்று பிரம்மா சொன்னர்.

அதன்பின் விசுவாமித்திரர் சிவபெருமானுடைய அபிப்ராயத்தையும் தீர்ப்பையும் அறிந்து கொள்வதற்காக அவரிடம் போனர். ''நான் இப்பொழுது என் அடியவன் ஒருவனைப் பார்க்கப் போகிறேன். இப்பொழுது எனக்கு நேரமில்லை. திருமாலிடம்

செல்லுங்கள். இதைப்பற்றி அவர் பொறுமையாகக் கேட்பார்,'' என்று சிவபெருமான் சொன்னார். அவ்வாறே அவர்களும் திருமாலிடம் சென்றார்கள். ''இதை நான் முடிவு செய்ய முடியாது. தயவு செய்து ஆதிசேஷனிடம் செல்லுங்கள். அவன் தன்னுடைய ஆயிரம் நாக்குகளால் எப்பொழுதும் இராம நாமத்தை உச்சரித்துக் கொண்டிருக்கிறான். அவன் ஒரு பெரிய பக்தன். இதற்குச் சரியான தீர்ப்பைச் சொல்ல அவன்தான் தகுதியானவன். அவன் ஒரு அறிவாளியும் ஆவான்,'' என்று திருமால் சொன்னார்.

அவ்வாறே அவர்களும் ஆதிசேஷனிடம் சென்று இந்த விஷயத்தைச் சொல்லி அவர் தீர்ப்பைக் கேட்டார்கள். ''என் தீர்மானமான முடிவைக் கட்டாயம் சொல்கிறேன்; அதற்குமுன் என் தலையில் சுமந்துகொண்டுள்ள இந்த பூமியின் பாரத்தை எடுத்துவிடுங்கள். அதன்பிறகுதான் இதைப்பற்றி என் கருத்தைச் சொல்ல முடியும்,'' என்று ஆதிசேஷர் கூறினார். அதன்பிறகு அவர்களிருவரும் ஆதிசேஷனிடம், ''ஆதிசேஷனே! உன் தலைமீதுள்ள பாரத்தை நீக்குவதற்குரிய வழியைச் சொல்'' என்று கேட்டார்கள். அதற்கு ஆதிசேஷன், ''தயவு செய்து உங்கள் தவம், சத்சங்கம் ஆகியவற்றின் பலனைக் கொடுங்கள். இந்தச் சுமை என்னைவிட்டு நீங்கிவிடும்'' என்றார்.

விசுவாமித்திரர் ''அவ்வளவுதானே! இதோ என்னுடைய நூறு வருட கால தவத்தின் பலனை உனக்களிக்கிறேன்'' என்றார். ஆனால் ஆதிசேஷனுடைய தலையிலிருந்த சுமை நீங்கவில்லை. அதன் பிறகு விசுவாமித்திரர் ''என் ஆயிரம் வருட தவப் பயனைத் தருகிறேன்'' என்றார். அப்பொழுதும் ஆதிசேஷன் தலையிலிருந்த பாரம் நீங்கவில்லை.

பிறகு விசுவாமித்திரர், ''என் ஆயுள் முழுவதும் இயற்றிய தவத்தின் பயனைக் கொடுக்கிறேன்'' என்றார். அப்பொழுதும்கூட ஆதிசேஷன் தலைச் சுமை நீங்கவில்லை.

''என் ஒரு கண நேர சத்சங்கத்தின் பயனை உனக்களிக்கிறேன்'' என்று வசிஷ்டர் சொன்னார். உடனே ஆதிசேஷனுடைய தலையின் மீது இருந்த பாரம் நீங்கிவிட்டது.

விசுவாமித்திரர் வெட்கத்தினால் தலை குனிந்தார். ஆதிசேஷனிடமோ வசிஷ்டரிடமோ ஒரு சொல்கூடப் பேசவில்லை. சத்சங்கம் தவத்தைவிட உயர்ந்தது என்பதை அவர் நன்கு உணர்ந்தார். தவத்தினால் ஏற்பட்ட கர்வம் நீங்கிற்று.

சத்சங்கம் என்பது ஒரு சாதகன் சம்சாரமாகிய பெருங்கடலைக் கடப்பதற்குதவும் வலிமை பொருந்திய ஒரு படகு. சத்சங்கத்தின் பெருமையை வாய்ச் சொற்களால் வர்ணிக்க முடியாது. சத்சங்கத்தை நாடினால், எல்லாவற்றையும் பெறலாம். புனித நூல்கள் எல்லாம் சத்சங்கத்தைப் புகழ்ந்து பேசுகின்றன. மனதிலுள்ள தீய சம்ஸ்காரங்களை நீக்கி, உள்ளத்தில் விருப்பு வெறுப்பற்ற நிலையை உண்டாக்குவதற்குச் சத்சங்கம்தான் சிறந்த வழி. மாயையின் தாக்குதலிலிருந்தும் கவர்ச்சியிலிருந்தும் சாதகனைக் காப்பாற்றுவதற்குரிய கோட்டை சத்சங்கம்தான். சத்சங்கம் இல்லாவிடில் சிறிதளவு ஆன்மீக முன்னேற்றத்தைக்கூட நீங்கள் அடைய முடியாது.

சத்சங்கம், சாந்தி, சந்தோஷம், விசாரம் (ஆராய்ச்சி) ஆகியவைதான் மோட்சத்தின் வாயிலிலுள்ள நான்கு காவலாளிகள். சத்சங்கம்

தான் நான்கிலும் மூத்த காவலன். அவனை நண்பனுக்கிக் கொண்டால் மற்ற மூவரும் உன் நண்பர்களாகி விடுவார்கள். நீங்கள் மேலான மோட்சம் எனும் வீடுபேற்றையும், நிரந்தரமான பேரின்பத்தையும் எளிதாக அடையலாம்.

## 2. ஹரிதாஸரும் நெறிதவறிய பெண்மணியும்

ஒருமுறை சைதன்ய மஹாபிரபுவின் சீடராகிய ஹரிதாஸர் தம் சுற்றுப் பயணத்தின்போது ஒரு கிராமத்தை வந்தடைந்தார். அவர் இரவும் பகலும் இடைவிடாது இறைவன் நாமத்தை உச்சரித்துக் கொண்டிருப்பார். அவருடைய பஜனையால் அருகிலிருந்த ஒரு போலீஸ் அதிகாரிக்கு இடையூறு ஏற்பட்டது. அந்த அதிகாரி ஹரிதாஸரைக் கெடுத்து மாசுபடுத்தத் திட்டமிட்டார். அவர் ஹரிதாஸரிடம் ஓர் அழகான பெண்ணை அனுப்பினார். தன் அழகிலும் கவர்ச்சிமிகு கண்களிலும் கர்வம் கொண்ட அந்தப் பெண்மணி இரவில் ஹரிதாஸர் இருந்த இடத்திற்குச் சென்றாள். ஒரு முனிவர் தம் சிறந்த பக்தியிலிருந்து தவறமுடியுமா? ஹரிதாஸர் இரவு முழுவதும் விடாமல் பாடிக் கொண்டே இருந்தார். விடியற் காலையில் தம் எதிரிலிருந்த பெண்ணைப் பார்த்து, ''தயவுசெய்து அடுத்த இரவு வாருங்கள். அப்போது பேசலாம்'' என்று சொல்லிவிட்டுத் தம் வேலையைக் கவனிக்கத் தொடங்கினார். ''என்ன மனிதர் இவர்!'' என்று வியந்த பெண்மணி, ''நாளை இரவு நான் வெற்றி பெறுவேன்'' என்றெண்ணிக் கொண்டு வீட்டுக்குப் போனாள்.

மறுநாள் இரவு அதிக மகிழ்ச்சியுடன் அந்தப் பெண் திரும்பி வந்தாள். மீண்டும் முன்மாதிரியே

நடந்தது, "அவர் என்னைவிட அழகிற் சிறந்த ஒன்றை அடைந்திருக்க வேண்டும். இதுதான் காரணம். இல்லாவிடில் விட்டிற் பூச்சி விளக்கில் வீழ்வதைப் போல என் வலையில் வீழ்ந்திருப்பார். எனவே இந்த முனிவரை மயக்கிய அந்த அழகுக்கெல்லாம் சிறந்த அழகை நானும் அடைய வேண்டும்'' என்று அந்தப் பெண்மணி எண்ணினாள்.

முனிவரைச் சந்தித்ததால் அவள் மன மாறுதல் அடைந்தாள். இறைவனை அடைய வேண்டுமென்று மிகவும் ஆவல் கொண்டாள். முனிவர் அவளுக்கு ஒரு ஜெப மாலையைக் கொடுத்து, அவளுடைய செல்வத்தை எல்லாம் ஏழைகளுக்குக் கொடுக்கச் சொல்லி உத்தரவிட்டு இறைவனுடைய திரு நாமத்தை உச்சரிக்கச் சொன்னார்.

நாளடைவில் அந்தப் பெண்மணி புனிதமான அடியவளானாள். முடிவில் இறைவனை தரிசித்து மேலான பேரின்பத்தைப் பெற்றாள். இதுதான் சத்சங்கத்தின் பெருமை.

## 3. என் இடுப்பை உன் காலால் மிதி.

ஒரு முறை ஒரு முனிவர் தம் சீடனைப் பரிசோதிக்க எண்ணினார். தம் இடுப்பு வலிப்பதால் அவனுடைய காலால் மிதிக்கச் சொன்னார். அதற்கு அந்தச் சீடன் ''ஐயா! தங்கள் புனிதமான உடலின் மீது என் கால்களை எவ்வாறு வைப்பேன்? அது பெரிய பாவமல்லவா'' என்றார்.

அதற்கு முனிவர், '' இவ்வாறு சொல்வதால் உன் பாதங்களை என் நாக்கின் மீது வைத்து, (என் கட்டளையை மீறி) எனக்குக் கீழ்ப்படியாமல் இருக்கிறாயல்லவா?'' என்று கேட்டார்.

இந்த உதாரணத்திலிருந்து நாம் ஒரு பாடம் கற்றுக்கொள்ள வேண்டும். ஒரு சீடன் தன் குருவின் கட்டளையை நிறைவேற்றும்போது அதைப் பற்றி தன் அறிவால் ஆராய்ச்சி செய்யக் கூடாது. அதிகப் பிரசங்கியாய் மாருமல், தன் குருவிடம் உண்மையான மாருத பக்தியைச் செலுத்த வேண்டும். குருவுக்கு எல்லா வகைகளிலும் தொண்டு செய்ய வேண்டும். அவருக்குத் தன் உடலால் தொண்டு செய்ய வேண்டும். அவரைத் தியானிக்க வேண்டும். அவரிட்ட கட்டளையைத் தாமதமில்லாமல் நிறைவேற்ற வேண்டும். அவர் மேற்கொண்ட பணி வெற்றிபெறச் சேவை செய்ய வேண்டும். குருவிடம் சிறிதும் குன்ருத பக்தியுடன் இருக்க வேண்டும். ஒரு முனிவரின் செயல்கள் விந்தையானவை. நீங்கள் அவருக்குச் செய்யும் சேவை எல்லாம் உங்கள் நன்மையைக் கருதித்தான். அவருக்கு ஒன்றும் தேவையில்லை. உங்களுக்குப் பலவிதமான கட்டளைகளையிட்டு, உங்களைப் பல வழிகளில் சோதித்து ஞானத்தை அடைவதற் கேற்ற பாத்திரமாக உங்களை அமைக்கிருர்.

ஒரு முனிவர் செய்யும் விந்தைகளைப் பார்ப்பதற்காக அவருக்குத் தொண்டு செய்யக் கூடாது. அவரிடமிருந்து உங்களுக்கு ஆன்மீகப் பயன்கள் கிடைக்க வேண்டும். இறைவனைத் தெரிந்து தெளிவதற்காக, மனம், சொல், உடல் ஆகிய மூன்றும் ஒன்றுபட்டு முனிவருக்குத் தொண்டு செய்ய வேண்டும். மனைவி, குழந்தைகள், செல்வம், பெயர், புகழ் மற்றும் தன்னலமுள்ள நோக்கம் ஆகியவற்றைக் கருதி முனிவருக்குத் தொண்டு செய்வது பெரும் தவருகும். முனிவருடன் தொடர்பு கொள்வதால் உங்களுக்கு உலகியல் விஷயங்கள் எல்லாவற்றிலும் வெற்றி கிட்டும் என்ருலும், அது வைரங்களைக் கொடுத்துவிட்டு

அவற்றிற்குப் பதிலாக வெறுங்கற்களைப் பெறுவது போன்றதாகும்.

## துறவிகளும் சமுதாயத்தின் மறுமலர்ச்சியும்

உலகத்தின் ஒழுங்கான அமைப்புக்குச் சாதுக்களும் துறவிகளும் அச்சாணி போன்றவர்கள். உலகத்தில் அமைதியும் சீரான இயக்கமும் இருக்கச் செய்வதற்கு மிகவும் தகுதியானவர்கள் அவர்களே. வலுத் தாக்குதலில் ஈடுபடும் நாடுகளை நெருக்கமாகக் கொண்டு வந்து ஒற்றுமையோடு இருக்கச் செய்வதற்குரிய கருவிகளும் அவர்களே. உலக சகோதரத்துவத்திற்காகப் பாடுபடும் உண்மையான சாதுக்களும், துறவிகளும் தங்கள் வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் பரந்த அனுபவம் பெறுகிறார்கள். சாதுக்களின் வாழ்க்கை பயங்கரமானது; இரு முனைகளும் கூரான வாளைப்போன்றது. வாழ்க்கையை நேர்மையான முறையிலும் அறப் பண்போடும் நடத்தாவிட்டால் ஒரு சாது திசை தெரியாமல் கெட்டுப்போவார்.

இக் காலத்தில் சிலர் காவியுடை உடுத்து துறவிகளின் இனம் முழுவதற்குமே கெட்ட பெயர் வாங்கிக் கொடுக்கும் வண்ணம் உலகெங்கும் சுற்றித்திரிவதைக் காண்கின்றோம். புனித நூல்களில் கூறப்பட்டுள்ள கட்டளைகளை முற்றிலும் புறக்கணித்து விடுகிறார்கள். அவர்கள் உலகத்தவர்களோடு கொள்ளும் தொடர்பினால், துறவிகள் கூட்டத்திற்கே பழிப்பும் வீணாகக் கெட்ட பெயரும் உண்டாகிறது.

அம்மாதிரியான தவறுகளையும் போலி நடவடிக்கைகளையும் தடுக்கவும், சாதுக்களையும் துறவிகளையும் மக்கட் கூட்டத்தின் உண்மையானதும் தகுதி

வாய்ந்ததுமான ஆசிரியப்பணிக் கேற்றவர்களாகச் செய்யவும், சாதுக் கூட்டத்திற்குரிய பெருமை யையும் மதிப்பையும் மீண்டும் உண்டாக்கவும், திறமையான செயல் முறைகளால் இவர்களுக்கு நன்கிணைந்த ஒற்றுமையை ஏற்படுத்துவது மிகவும் தேவையான ஒன்றாகும்.

உண்மையான சந்நியாசிகளையும் சாதுக்களையும் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு உணவு, இருப்பிடம் ஆகியவற்றை ஏற்பாடு செய்து, கட்டுப்பாடுகளுடன் நடத்துவதுதான் உலகம் முழுவதற்கும் நல்வாழ்வு அளிப்பதற்கு மிகவும் இன்றியமையாத தேவையாகும்.

மகாநாடுகள், பிரதிநிதிகளின் கூட்டங்கள், பொதுக் கூட்டங்கள், சிறப்புக் கூட்டங்கள் ஆகியவற்றில் இந்து மதத்தைச் சேர்ந்த சாதுக்கள், துறவிகள் மட்டுமல்லாமல், கிறிஸ்துவ மதம், இஸ்லாம், சீக்கிய மதத்தைச் சார்ந்த துறவிகளும், சாதுக்களும் கலந்துகொள்ள ஏற்பாடு செய்ய வேண்டும். மதங்கள் எல்லாம் ஒரே அடிப்படையும் ஒரே கொள்கையை ஆதாரமாகவும் கொண்டவை. உலகியல் பற்றுக்களைத் துறந்து, என்றும் அழியாத உண்மையைக் கண்டறிந்து மக்களுக்கு அதை உணர்த்துவதற்காகத் தங்கள் வாழ்நாள் முழுவதை யும் அர்ப்பணித்துக் கொண்டுள்ளவர்களுடைய நடைமுறை வாழ்க்கையிலும் செயல்களிலும் எவ் விதமான வேறுபாடுகளும் இருக்க வேண்டியதில்லை.

உலகத்தின் எல்லாப் பகுதிகளிலும் உள்ள சாதுக்களின் சிறந்த அமைப்பால் உலகமக்கள் அனை வருக்கும் நல்வாழ்வு கிடைக்கும். மடங்கள், கிறிஸ்துவ தேவாலயங்கள், மசூதிகள் மற்றுமுள்ள மத நிறுவனங்களின் தலைவர்கள் அனைவரும் ஒன்று

கூடி இந்தப் பொது நிறுவனம் திறமையாகச் செயல் படுவதற்கான நல்ல ஆலோசனைகளைத் தெரிவிக்க வேண்டும்.

## சாதுக்களின் அமைப்பு

தற்போதைய தேவை இதுதான். சாதுக்கள், துறவிகளின் சிறந்த அமைப்பு ஒன்றிருந்தால் அதிக ஆன்மீக நன்மை விளையும். ஒரு புதிய சகாப்தம், ஒரு புதிய உலகம், ஒரு புதிய பண்பாடு தோன்றும்.

இம்மாதிரி அமைப்பு ஒன்று வேண்டுமென்று பலத்த கூக்குரல் இருக்கின்றது. இந்தியாவிலுள்ள இல்லறவாசிகள் ஒவ்வொருவரும் இதைப் பற்றிப் பேசுகின்றார்கள். இதை எப்படிச் செய்வது? அதுதான் ஒரு பிரச்னை; பெருங்கேள்வி!

சாதுக்கள் பல்வேறு வகையான இனங்களைச் சார்ந்தவர்கள். பல்வேறு கூட்டங்களின் கலப்பு. அக்கூட்டத்தில் பல்வேறு வகையான மதத்தவரும், இனத்தவரும் இருக்கின்றார்கள். பைராகிகள், கபீர்பந்திகள், தாதுபந்திகள், கோரக்நாத் பிரிவினர், நிர்மலர்கள், உதாசிகள், சங்கரரைப் பின் பற்றுபவர்களான தசநாம சன்னியாசிகள், இராம கிருஷ்ண மடத்தைச் சார்ந்த துறவிகள், நிரஞ்சன அகாட துறவிகள், நாகர்கள் மற்றும் பல்வேறு வகையினர் இருக்கிறார்கள்.

ரிஷிகேசத்தில் சாதுக்களும் துறவிகளும் குடியேறி இருக்கிறார்கள். இந்த அழகான இடம் கங்கை நதிக்கரையில் அமைந்து, ஆன்மீக அலைவுகள் நிறையப் பெற்றிருப்பதால், சாதுக்களும் துறவிகளும் தாங்கள் தவமும் தியானமும் செய்ய இதைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். பண்டைக் காலத்தில்

முனிவர்கள் இங்கே வாழ்ந்து, தவம் செய்திருக்கிறார்கள். இமயமலையிலுள்ள உத்தரகாசியிலும், ஹரித்வாரத்திலும் அநேக சாதுக்கள் இருக்கின்றார்கள்.

ரிஷிகேசத்தில் சாதுக்களுக்கு இலவசமாக உணவை வழங்குவதற்கு இரண்டு உணவுச்சாலைகள் இருக்கின்றன. இலவச உணவு வழங்குமிடத்தில் எல்லாவகையான மக்களும் காவி உடையணிந்து கொண்டு கூட்டம் கூட்டமாக வந்துவிடுகிறார்கள். அதனால் தீய சக்திகள் தோன்றி, மக்களின் புனிதத் தன்மை கெட்டுப் போகிறது. புனிதமான இடங்களில் தீயவர்கள் இருந்துகொண்டு தங்கள் வேலையைத் தீவிரமாகச் செய்து கொண்டிருக்கிறார்கள்.

சாதுக்கூட்டங்களின் தலைவர்களுக்குத் தங்கள் அமைப்பைப் பற்றிய வேட்கை தீவிரமாக இருக்க வேண்டும். அப்போதுதான் வேலையைத் திறமையாகச் செய்ய முடியும். தங்கள் தனிப்பட்ட வேற்றுமைகளையும், கருத்துக்களையும் மறந்து, ஒருங்கே அமர்ந்து முழு மனதுடன் வேலை செய்ய வேண்டும். சாதுக்களை ஒன்றுசேர்ப்பது எளிதான காரியமல்ல; அது மிகவும் கடினமான காரியம். அது முற்றிலும் சரிவர அமைவதற்குச் சிறிது காலம் ஆகும்.

மண்டலேஸ்வரர்களும், மடங்களின் தலைவரும் மத நிறுவனங்களின் தலைவர்களும், மக்களிடம் செல்வாக்குள்ள சாதுக்களும், துறவிகளும் இந்தப் பணியை மேற்கொள்ள முன்வர வேண்டும்.

தனிப்பட்ட துறவி ஒருவரால் இப்பணியைச் செய்ய முடியாது. சங்கரருக்கு அரசர்களின் துணையும் ஒத்துழைப்பும் கிடைத்தது. அவர் தன்னுடைய

படையைக் கூட்டிப் பிரசாரம் செய்தார். அம் மாதிரியே இப்பணிக்கு மனித ஆற்றல், பண ஆற்றல், படை, தொண்டர் கூட்டம் ஆகியவை தேவை.

இப்பொழுது துறவிகளுக்கிடையே காவியுடை போர்த்திய கயவர்களும் கொடியவர்களும் சிலர் வாழ்கிறார்கள். அவர்களைச் சிறிதும் இரக்கம் காட்டாமல் வெளியே துரத்திவிட வேண்டும், அவர்கள் பெருத்த தீங்கு செய்கிறார்கள். இதைச் செய்வதற்குப் பெருத்த எதிர்ப்பு தோன்றும். அதைச் சந்திக்கவும் தயாராக இருக்க வேண்டும். சாதுக்களின் அமைப்பை நிறுவ மேடைப் பேச்சுக்களாலும், அனல்கக்கும் பேச்சுக்களாலும் பயனில்லை. அதைச் செய்து முடிக்க உடலுறுதியும், சலிப்பில்லாத தன்மையும், அறிவும் தன்னலம் கருதா இயல்பும் படைத்த தொண்டர்கள் தேவை. அப்போது இந்தப் பணியை வெற்றிகரமாக முடிக்க லாம்.

இனியும் காலம் தாழ்த்தக்கூடாது. இப்போதே இப்பணியைத் தொடங்கவேண்டும். மதத் தலைவர் கள் அனைவரும் ஒத்துழைக்க வேண்டும். உலக மக்களுக்கு நல்ல முறையில் நன்மை செய்ய முடியும். அப்போதுதான் உலகத்தில் உண்மையான ஆன்மீகப் புரட்சி ஏற்படும்.

தேவர்களே! நித்திய சித்தர்களே! தயவு செய்து மதத் தலைவர்களின் மனத்துள் நுழைந்து, உணர்வூட்டி இப்பணியைச் செய்ய அவர்களைத் தூண்டுவீர்களா?

## துறவிகளின் மேன்மையான பணி

சாதுக்கள் அல்லது துறவிகளின் கூட்டம் இந்த உலக மக்கள் அனைவருக்கும் செய்ய வேண்டிய

பொதுவான பணி ஒன்று இருக்கின்றது. இவ்வுலகின் ஆன்மீகத் தன்மையின் பாது காவலர்கள் அவர்கள் தாம். அதனுல் இவ்வுலக மக்களே மேன்மைப் படுத்தவும் முன்னேற்றமடையவும் செய்யும் பணி அவர்கள் கையில்தான் இருக்கின்றது. தம்மிடம் ஒப்படைக்கப்பட்டுள்ள மகத்தான பணியைச் செய் வதற்குத் தம்மைத் தயார் செய்துகொள்ளும் வகை யில் ஒரு கட்டுப்பாட்டுக்காக மற்ற மக்களிடமிருந்து தம்மைத் தனியே பிரித்துக்கொண்டு தனித்து வாழ்கிருர்கள். துரதிர்ஷ்டவசமாக இந்த நிலே ஒரு நீடித்த அமைப்பாகவே மாறி சாதுக்களின் கூட்டம் சமவெளிகளிலும் நகரங்களிலும் துன்பத் தில் உழன்று கொண்டிருக்கும் மக்கட் சமுதாயம் வேறு, தாங்கள் வேறு என்று கருதித் தனித்திருக் கும் நிலே ஏற்பட்டுள்ளது.

மற்ற மக்களோடு தொடர்பில்லாத காரணத் தால், தாங்கள் ஆற்றவேண்டிய பணியை சாதுக் கள் மறந்து விட்டார்கள். சமுதாயத்திலுள்ள மற்ற மூன்று பிரிவினருக்கும் அறிவும் ஞானமும் ஊட்டவேண்டிய பணியைச் செய்யாதிருக்கின்ருர் கள். எனவே துறவிகள் மீண்டும் கிளர்ந்தெழுந்து சமுதாயத்தின் வாழ்க்கையில் தாங்கள் செய்ய வேண்டிய பணியை மீண்டும் செய்யத் தொடங்க வேண்டும். தன்னலங் கருதாமலும் முழுமன துடனும் பணியாற்ற வேண்டும் என்ற உயர்ந்த இலட்சியத்துக்குத் தங்களே அர்ப்பணித்துக் கொண்ட ஒரே அமைப்பாக விளங்கவேண்டும். இவ் வுலகம் பல்லாண்டுகாலமாக மூழ்கியுள்ள, காட்டு மிராண்டித்தனமான போர், இரத்தக் களரி ஆகிய வற்றினின்றும் விடுபட்டு உலக சகோதரத்துவமும் அமைதியும் நிறைந்த புதிய சகாப்தத்தை நிறுவப் பாடுபட வேண்டும்.

புதிய உலகம் சிறந்த முறையில் மறுமலர்ச்சி யடைய சமுதாயத்தின் ஒவ்வொரு பிரிவும் தன் பங்கைச் செய்து முடிக்கும் புதிய மறுமலர்ச்சி உலகப்போருக்கான முன்னேடியாக இராமல் நிலை பெற்று நீடித்திருக்க வேண்டுமானுல், அது என்று முள்ள ஆன்மீகத் தன்மையை அடிப்படையாகக் கொண்டு அமையவேண்டும். இந்த அடிப்படை யான ஆன்மீக அஸ்திவாரத்தை அமைக்கும் பணி இச் சமுதாயத்திலுள்ள சாதுக்கள், துறவிகள் ஆகியவர்களுடையதுதான்.

எதிர்காலச் சமுதாயத்தை ஆன்மீக மயமாக் கும் பொறுப்பு ஆன்மீகத் துறையிலுள்ள முனிவர் கள், சாதுக்கள், மகாத்மாக்கள் ஆகியவர் களுடைய்து. இந்நாட்டின் புகழ்மிக்க பரம்பரையை நிலைநாட்டவும், தாங்கள் சமுதாயத்தின் பயனுள்ள ஒரு பிரிவினர் என்ற மதிப்புக்குரிய இடத்தை நிலை நிறுத்திக் கொள்ளவும் அவர்கள் இப்பணியை செய்யவேண்டும்.

நீதிமார்க்கத்திலும் ஆன்மீகத் துறையிலும் சாதாரண மக்கள் சாதுக்களையும் துறவிகளையுமே ஆலோசனைக்காக எதிர்நோக்கி இருக்கிருர்கள். எனவே துறவிகள் அறிவுரைகள் மூலமும், எடுத்துக் காட்டுகள் மூலமாகவும், வாழ்க்கையில் நேரடி யான செயல்முறைகள் மூலமாகவும் பணியைத் தொடங்க வேண்டும். நாட்டிலுள்ள துறவிகள் அனைவரையும் ஒருங்கிணைந்து செயல்படும் ஒரே அமைப்பிற்குள் கொண்டுவருவதற்கு, எல்லோரும் உற்சாகத்தோடு இணைந்து, எல்லா வகையிலும் துணை புரிந்து அதை முழு வெற்றியாக்குவோம். இந்திய நாட்டில் புனிதத் தலங்களிலுள்ள அனைத்து சாதுக்களுக்கும் முன்னுள்ள இந்த மகத்தான பணி வெற்றிபெற வேண்டி, எல்லாம்வல்ல இறை

வனிடம் முழு நம்பிக்கையுடனும் அக்கறையுடனும் தொடங்குவோமாக !

இந்த மாதிரி ஒரு அமைப்பை ஏற்படுத்தும் செயல், போருக்குப் பின் உலக மக்களின் நல்வாழ் விற்காக உலகம் முழுவதிலுமுள்ள சாதுக்களேயும், மகாத்மாக்களேயும் கொண்ட பெரிய அமைப்பை ஏற்படுத்தும் மகத்தானதொரு பணிக்கு முதற் படி யாகும். பரதச் சக்ரவர்த்தியின் காலத்திலிருந்த தைப் போல் பாரத வர்ஷம் மீண்டும் உன்னத நிலையைப் பெற வேண்டும். உலக நாடுகள் முழுவ தற்கும் இந்திய அன்னை உண்மையில் ஆன்மீக அன்னையாக விளங்குவாள். இதை அடைவதற்கு உதவும் கருவி தன்னலங் கருதாமல் செயல்படும் இந்த அமைப்பேயாகும்.

இந்தப் பணிக்குத் தன்னைத் தயாராக்கிக் கொண்டு தகுதியையும் பெறுவதே இந்த அமைப் பின் முதல் வேலையாகும். அதற்குமுன் இந்தச் சங்கத்தின் உறுப்பினர்களின் எண்ணிக்கையைக் கணக்கெடுத்துக் கொள்ளவேண்டும். மகாபாரதப் போருக்கு முன்னால் நிகழ்ந்ததைப்போல நமக்குள்ள ஆற்றலை அளவிட்டுக்கொள்ள வசதியாக இருக்கும். ஏனெனில் இவ்வுலகத்தைச் சூழ்ந்துள்ள தாமச குணம், தீய சக்திகள் ஆகியவற்றை வெல்வதற்கு வேண்டிய சத்வ குணமும் நல்ல இயல்பும் நாமே ஆவோம்.

## துறவிகளும் சமுதாய நல்வாழ்வும்

ஒவ்வொரு கல்லூரியின் மாணவர் விடுதியிலும் ஒரு சாதுவை அழைத்துத் தங்கச் செய்யவேண்டும். ஒவ்வொரு நாளும் அவர் மாணவர்களுக்கு நல்லொ ழுக்கம், ஆன்மீகப் பண்பாடு, தியானம், இறை வழிபாடு ஆகியவற்றைக் குறித்த எளிய வகுப்புகளை

நடத்த வேண்டும். மாணவர்களுக்குப் பகவத் கீதை, பாகவதம், இராமாயணம், உபநிடதங்கள் ஆகியவற்றைப் போதிக்க வேண்டும். அப்போது தான் மாணவர்கள் நல்ல முறையில் முன்னேறி, நற்பண்புகளைப் பெறுவார்கள். தற்காலத்தில் மாணவர்கள் வருந்தத் தக்க நிலையிலிருக்கிறார்கள். இறைவனிடமும் மத சம்பந்தமான நூல்களிலும் அவர்களுக்கு நம்பிக்கையில்லை. அவர்கள் மதத்திற்கு எதிரிகளாகிவிட்டனர். கல்வி நிறுவனங்களின் தலைவர்கள் துறவிகளோடு தொடர்பு கொண்டு, தங்கள் நிறுவனங்களில் துறவிகளை ஆசிரியர்களாக நியமித்து இளைய சமுதாயத்துக்கு ஆன்மீகத் துறையில் வளர்ச்சிபெற ஒரு வாய்ப்பளிக்க வேண்டும்.

அரசாங்க சிறைச்சாலைகளில் வாரம் ஒருமுறையாவது பார்வையிட, ஒரு துறவியை அனுமதிக்க வேண்டும். கைதிகளுக்கிடையே பிரார்த்தனையையும் பஜனையையும் நடத்தியும், நீதிபோதனை மூலமாகவும் அவர்களை நல்லவர்களாக மாற்ற வேண்டும். மனிதர்கள் அறியாமையின் காரணமாகத்தான் குற்றங்களையும் திருட்டுகளையும் செய்கிறார்கள். கல்வி அல்லது தகுந்த பயிற்சியின் மூலம் அறியாமையைப் போக்கிவிட்டால் குற்றவாளிகளும் சிறைச்சாலைகளும் இருக்க முடியாது. மண்ணுலகிலேயே விண்ணுலகத்தைப் படைக்கலாம். சிறை நீங்கிய குற்றவாளிகள் சங்கம் அல்லது இதைப் போன்றுள்ள சங்கங்கள் இவ்விஷயத்தைப் பற்றிக் கவனிக்குமா ?

மருத்துவமனையுள்ள ஒரு நகரில் துறவியிருந்தால் தினந்தோறும் அங்குச் சென்று நோயாளிகளை உற்சாகப்படுத்த அவருக்கு வாய்ப்பளிக்கவேண்டும். நோயாளிகள் விரைவில் குணமடைய அவர்களுக்கிடையே பிரார்த்தனை, பஜனை, தியானம் ஆகியவற்றை நடத்த வேண்டும். அவர்கள் உடலுக்குள்

இருக்கும், நோய்வாய்ப்படாததும், அழிவற்றது மான ஆத்மாவின் இயல்பைப்பற்றி அவர்களுக்கு எடுத்துரைக்க வேண்டும்.

மேற்கூறிய ஆலோசனைகளைச் செயல்படுத்தினால் இந்த நாளில் மிகவும் தேவையாக இருக்கும் ஆன்மீக முன்னேற்றத்தை ஏற்படுத்தலாம். தன் நலங்கருதாது தொண்டு செய்யத் தயாராக இருக்கும் துறவிகள் தங்கள் இருப்பிடங்களைவிட்டு உலக மக்களிடையே வரத் தயங்கமாட்டார்கள். சமுதாயத்தின் நல்வாழ்வைக் கருதி அம்மாதிரியான பெருமைமிக்க கூட்டத்தினரின் தேவையை இந்த உலகம் உணர வேண்டும்.

## சத்சங்கத்தைப் பற்றிய சில விவரங்கள்

### சத்சங்கம் என்பது என்ன ?

1. ஒருவன் பிரம்மத்தில் நிலை பெறுவதே உண்மையான சத்சங்கம். ஞானிகளின் தொடர்பும் சத்சங்கமாகும். இறையுணர்வு பெற்ற மகாத்மாக்கள் எழுதிய மத சம்பந்தமான நூல்களைப் படிப்பதும் சத்சங்கமாகும். சத்சங்கம் அல்லது ஞானிகளின் தொடர்பு மனதிலுள்ள இருளைப் போக்கி, உன்னைச் சரியான பாதையில் செலுத்தி, உன் உள்ளத்தில் ஞானமாகிய சூரியனைப் பிரகாசிக்கச் செய்கிறது.

2. சத்சங்கம் என்பது ஞானிகளோடு தொடர்பு கொள்வது. சாதுக்கள், ஞானிகள், முனிவர்கள், யோகிகள், துறவிகள் ஆகியவர்களோடு தொடர்புகொண்டு அவர்களுடைய அரிய உபதேசங்கள் அல்லது அறிவுரைகளைக் கேட்டு அவற்றை எவ்வித எதிர்ப்புமின்றிப் பின்பற்றுங்கள். அதுதான் சத்சங்கம்.

## இறைவனும் முனிவரும்

3. இறைவன் ஒரு பெரிய தூய்மைப்படுத்து பவர். ஒரு முனிவரும் அவ்வாறே ஒரு பெரிய தூய்மைப்படுத்துபவர்.

4. முனிவர்களும் ஞானிகளும் நாட்டிற்குத் தேவையேற்படும்போது, இறைவன் அவர்கள் உருவங்களாக அவதரிக்கிறார்.

5. இறைவன் ஞானிகள், முனிவர்கள் மூலமாகச் செயல்படுகிறார்.

6. இறைவன் தம்முடைய புகழ், அளவு கடந்த ஆற்றல், ஞானம், பேரின்பம் ஆகியவற்றை முனிவரின் மூலமாக வெளிப்படுத்திக் கொள்கிறார்.

7. இறைவன் முனிவரின் இதயம். முனிவர் இறைவனின் இதயம்.

8. ஒரு முனிவரைச் சந்தித்து அவர் தொடர் பால் பயன் பெறுவது மிகவும் கடினமானது. இறையருள் இருந்தால்தான் முனிவரின் தரிசனமும் சத்சங்கமும் கிடைக்கும்.

9. இறையருள் முனிவரின் மூலமாகச் செயல் படுகிறது.

## முனிவர்களின் பெருமை

10. முனிவர்கள் மதத்தின் உயிருள்ள அடை யாளங்களாவார்கள். மக்கள் குலத்துக்கு உண்மையில் நன்மை செய்பவர்களும் அவர்களே.

11. ஞானி அல்லது முனிவர் அல்லது யோகி என்பவர் காந்தத்தைப் போன்றவர்: ஆற்றல், ஞானம் ஆகியவற்றின் மையமும் அவரே.

12. ஒரு ஞானி இந்த உலகத்தை என்றும் நிலைத்திருக்கும்படி செய்கிறார். நிலையான ஆற்றலைப் பெறுவதற்குரிய ஆதாரமும் அவரே. மறுமலர்ச்சியடையாத மக்களுக்கு இறையருளைப் பெற்றுத் தருபவரும் அவராவார்.

13. சமுதாயத்தை அழிவிலிருந்தும் அழுகிப் போவதினின்றும் காப்பாற்றும் உப்பைப் போன்றவர் ஒரு ஞானி.

14. சம்சாரமாகிய கொந்தளிக்கும் கடலில் கலங்கரை விளக்கம் போன்றவர் ஒரு முனிவர். அநேக மக்களின் வாழ்க்கையில் ஏற்படும் கப்பல் சேதங்களைத் தடுக்கிறார்.

15. இறையுணர்வு பெற்ற ஒரு ஞானி மகிழ்ச்சி, இன்பம், ஞானம் ஆகியவற்றின் ஊற்றை போன்றவர். அவரோடு தொடர்புகொண்டு ஆன் மீக வளர்ச்சியைப் பெறு. நம்பிக்கையோடும் பக்தி யோடும் அவருக்கு நன்மை செய்.

16. ஒரு ஞானி ஆன்மீக ஞான ஊற்றுவார். அடக்கத்துடனும் மரியாதையுடனும் அவரை அணுகு. அவர் உனக்கு தெய்வீக ஞானத்தை அருள்வார்.

17. முனிவர்களிடமிருந்து ஞானத்தைப் பெறு. அவர்கள்தாம் உன் பாதுகாவலர்கள். தெய்வீகப் பண்புகளை உடையவர்கள் ஞானிகள் என்று அறிந்துகொள்.

## சத்சங்கத்தினால் ஏற்படும் நன்மைகள்

18. மகாத்மாக்கள், சாதுக்கள், குரு ஆகிய வர்களோடு பெறும் சத்சங்கம் விரைவில் ஆன்மீக வளர்ச்சிபெறுவதற்கு மிகவும் உதவி செய்யும்.

19. உலகியல் தன்மையுள்ள மக்களின் மனதை ஆன்மீகப் பாதையை நோக்கி மாற்றிச் செலுத்தவும், தீய, கொடிய சம்ஸ்காரங்களை முற்றிலும் அழிக்கவும் விரைவானதும் எளியதானது மான வழி சத்சங்கம்தான்.

20. சத்சங்கம் மனதை மேன்மையடையச் செய்து அதைத் தூய சத்வ குணத்தால் நிரப்பு கிறது. மனதிலுள்ள தீய எண்ணங்களைத் துடைத்து விட்டு பிரம்ம ஞானம் பெற வழிகாட்டுகிறது.

21. சத்சங்கமில்லா விட்டால், மாசுபடிந்த மனத்தை இறைவனை நோக்கித் திருப்ப முடியாது.

22. ஞானிகளோடு நடத்தும் சத்சங்கம் விவேகம் அல்லது ஞானத்தை உறுதியாகத் தரும். சத்சங்கமில்லா விட்டால் வைராக்கியம் என்னும் விருப்பு வெறுப்பற்ற தன்மையை அடைய முடியாது.

23. சத்சங்கம் அறியாமையாகிய இருளைப் போக்கி உலக இன்பங்களை நாடும் தன்மையை நீக்கி வைராக்கியமென்னும் பற்றற்ற தன்மையை உண்டாக்கும். அறியாமையாகிய மேகத்தைக் கிழித்துக்கொண்டு வெளிவரும் சூரியன்தான் சத் சங்கம். அது உங்களை தெய்வீக வாழ்க்கையை நடத்தச் செய்து இறைவனிடம் உறுதியான நம்பிக்கை கொள்ளும்படிச் செய்கிறது.

24. ஒரு சாதுவின் தொடர்பு சாதகனிடத் தில் சாத்வீகப் பண்புகளை விரைவில் பெருகச் செய் கிறது. உறங்கிக் கிடக்கின்ற உணர்வுகளைத் தட்டி எழுப்பவும், விரும்பத்தகாத எதிர்மறைப் பண்பு களையும் குறைகளையும் நீக்கவும் தேவையான உள்ள வலிமையைத் தருகின்றது.

25. மோட்சத்தை அடைவதற்குச் சத்சங்கம் பெரிதும் உதவுகிறது. அதைத்தவிர வேறு வழியே இல்லை. மூவகைத் துன்பங்களையும் நீக்கி, அழித்து விடுகிறது. மாயையையும், இழிந்த மனத்தையும் வெல்வதற்குரிய உறுதியான வழி சத்சங்கம்தான்.

26. இளஞ்சாதகர்களை மாயையின் கவர்ச்சியிலிருந்தும் தாக்குதல்களிலிருந்தும் காப்பாற்ற உதவும் காவல் நிறைந்த வெல்ல முடியாத கோட்டைதான் சத்சங்கம்.

27. நீரில் மூழ்கிய மனிதனுக்குப் பாதுகாப்பாக இருக்கும் படகைப்போன்று உலகியலாகிய பெருங்கடலில் மனிதர்கள் மூழ்காமல் பாதுகாப்பவர்கள் சாதுக்கள் அல்லது முனிவர்கள் ஆவார்கள்.

28. சத்சங்கம் மோட்சத்தின் வாயிற்படியிலுள்ள காவலன். அவனோடு தோழமை கொண்டால் அவன் தன்னுடைய மற்ற நண்பர்களான, விசாரம் (ஆராய்ச்சி), சாந்தி (அமைதி) சந்தோஷம் (மன அமைதி அல்லது திருப்தி) ஆகியவர்களுக்கு உங்களை அறிமுகப்படுத்துவான். அதனால் நீங்கள் எளிதாகவும் விரைவிலும் ஆன்மீகத் தெளிவு பெறுவீர்கள்.

29. சத்சங்கம் தவறாது பயனளிக்கும்.

30. சத்சங்கம் அல்லது ஞானிகளின் தொடர்பு என்பது வாழ்க்கையிலுள்ள துன்பங்கள் எல்லாவற்றையும் போக்கும் மருந்தாகும்.

31. சத்சங்கத்தைப்போல உணர்வூட்டுவதும், மேன்மைப் படுத்துவதும், ஆறுதலளிப்பதும், மகிழ்ச்சியூட்டுவதும் வேறு எதுவுமில்லை.

32. மனிதனுக்குத் தூய்மையும், ஞானமும் அளிப்பவைகளிலே மிகவுயர்ந்தது சத்சங்கம்.

33. ஒரு ஞானியுடன் ஒருநிமிட நேரம் கொள்ளும் சத்சங்கம் ஓர் அரசை ஆள்வதைவிட மிகச் சிறந்தது.

34. உன் மனப்புண்களை ஆற்றி, புத்துயி ரூட்டி, உற்சாகத்தைப் பெறச் செய்து, அமைதி யும் ஆனந்தமும் பெற வழிகாட்டும் ஞானிகளின் தொடர்பைப் பெற முயற்சி செய்.

35. முழுமை பெற்ற, சத்தியத்தின் தீர்க்க தரிசிகளான முனிவர்கள், சாதுக்கள் ஆகியவர் களின் அறிவுரைகளைப் பின்பற்று. அவர்கள் ஆன்மா வோடு ஒன்றுபடு.

36. வாழ்க்கை, புகழ், இன்பம், ஆற்றல், அறிவு ஆகியவைகளெல்லாம், பெரியவர்களிடத் திலும், சாதுக்களிடத்திலும் மரியாதையுடன் நடந்துகொண்டு அவர்கள் பாதங்களில் நம்பிக்கை யுடனும் பக்தியுடனும் வீழ்ந்து வணங்குபவர் களிடம் மேலும் மேலும் வளர்ச்சியடையும்.

## பெரியவர்களின் தொடர்பு எவ்வாறு மாறுதலை விளைவிக்கின்றது?

37. மனித மனம் எதையும் எளிதில் ஏற்றுக் கொள்ளும். தீயவர்களிடம் தொடர்பு கொண் டால், தீய இயல்புகளை ஏற்றுக் கொள்ளும். புனிதமான பெரியவர்களின் கூட்டத்தில் சேரும் போது அது தெய்வீகப் பண்புகளை அடையும்.

38. நல்ல குறிக்கோள்கள் தம்மைப் போன்ற இயல்புகள் வளருமாறு தூண்டிவிடும். தீய உதா ரணங்களும், மனம் எச்சரிக்கையாக இராவிட்டால் அவ்வாறே தூண்டும்.

39. ஒரு ஞானியிடம் நீங்கள் போனுல், உங்களுக்குள்ளே அமைதியும், தூய்மையும் தானுகவே வரும்.

40, குளிர், அச்சம், இருள் ஆகியவை தீயை அணுகும் ஒருவனிடமிருந்து விலகுவதைப் போல, பலஹீனம், உலகியல் தன்மை, அறியாமை ஆகியன முனிவர்களிடம் நெருங்கி இருப்பவரிடமிருந்து விலகிப்போகும்.

41. முனிவர்கள் தங்கள் அருகில் வருபவர்களைப் பார்வையால் தூய்மைப்படுத்துகிருர்கள். ஆனுல் கங்கை நீரில் மூழ்கி எழுபவர்களிடம் உள்ள பாவங்கள் தானே நீங்கிப்போகும்.

42. முனிவர்கள் பாவிகளைப் பார்த்த மாத்திரத்திலேயே அவர்களிடமுள்ள பாவங்கள் பறந்தோடிப் போகும்.

43. முனிவரைக் காண்பது மகிழ்ச்சியைத் தரும். அவருடன் வாழும்போதெல்லாம் அமைதி ஏற்படும். அவருடன் பேசுவது பேரின்பமாகும்.

44. முனிவரைப்பற்றி எண்ணும்போதே தீய ஆசைகள், தாழ்ந்த எண்ணங்கள் ஆகியவை மறைந்தொழிகின்றன.

45. முனிவரைப் பற்றி எண்ணும்போது, அவரை நற்பண்புகளின் உருவமாகவே எண்ணுபவர்களின் மனமும் மாறி விடுகிறது. எனவே மனம் தூய்மை பெறுகிறது.

46. முனிவர்களின் வாழ்க்கையைப் பற்றித் தியானம் செய்வது சத்சங்கமாகும். அவர்கள் எழுதிய நூல்களைப் படிப்பதும் சத்சங்கமாகும்.

47. முனிவர்களுடன் வாழ்வது, அவர்களைப் பற்றி எண்ணுவது, அவர்கள் ஆசிகளைப் பெறுவது உங்களுக்குத் தூய்மை, உணர்ச்சிப் பெருக்கு, தெய்வீக உணர்வு ஆகியவைகளாலான மழை பொழிவதைப் போன்றிருக்கும்.

48. முனிவர்களின் தொடர்பு மட்டும் உண்மையான சாதகர்களின் வாழ்க்கையை மிகச் சிறந்த முறையில் மாற்றியமைக்கும் ஆற்றல் படைத்தது. வாழ்க்கையைத் தூய்மை, ஆன்மீகம், மேன்மை ஆகியவைகளுக்கு உயர்த்திவிடுகிறது. மிகவும் அதிகமாக உலகியல் மனப்பான்மை உள்ளவர்களைக்கூட பாதிக்காமல் விடுவதில்லை.

49. முனிவர்களோடு மிகச் சிறிது காலமே தொடர்பு கொண்டவர்கள்கூட இறைவனிடம் உறுதியான நம்பிக்கையைப் பெறுகிறார்கள்.

50. ஞானி அமைதியாக இருக்கிறார். சில சொற்களே பேசுகிறார். ஆனால் அந்தச் சொற்களே மிக அதிகமான பலனை விளைவிக்கின்றன. அவரையும் அவர் சொல்லும் செய்தியையும் புரிந்துகொள்கின்றவர்களுக்குப் புதிய வாழ்க்கையும் இன்பமும் ஏற்படுகின்றன. அவர் பேசாமல் இருந்தாலும், அவருடைய தோற்றமே சாதகர்களுக்கு ஏற்படும் சந்தேகங்கள் எல்லாவற்றையும் நீக்கிவிடுகின்றது.

51. முனிவர்களின் தொடர்பால் இறையன்பு உண்டாகிறது. இறையன்பால் மோட்சம் கிடைக்கிறது.

52. புனிதமான பெரியவர்களோடு ஒரு நிமிடம் மட்டும் கொள்ளும் தொடர்பு வாழ்க்கையாகிய பெருங் கடலைக் கடப்பதற்கு உதவும் கப்பலைப் போன்றது.

## முனிவர்கள் தொடர்பால் பயனடைவது எப்படி ?

53. ஜீவன் முக்தர்கள் அல்லது விடுதலை பெற்ற ஆன்மாக்கள் ஞானத்தின் சிகரத்தை அடைவதற்கு முயற்சி செய்து கொண்டிருக்கும் எல்லோருக்கும் எப்பொழுதும் உதவத் தயாராகஇருக்கிறார்கள். இவ்வுலகத்தில் அவர்கள் வேலை அதுதான். அவர்கள் உதவியை நாடி அதை ஏற்றுக் கொள்ளும் மனப்பான்மையோடிருப்பதுதான் சாதகர்களின் கடமை.

54. முனிவர்களின் தொடர்பால் பயனடைவதற்கு உங்களைத் தயார் செய்துகொள்ள வேண்டும். மனதில் ஏற்கெனவே ஏதாவது ஓர் எண்ணம் அல்லது விருப்பு வெறுப்புடன் அவர்முன் போகக்கூடாது. திறந்த, ஏற்றுக்கொள்ளும் மனத்துடன் அடக்கத்துடனும் மரியாதையுடனும் செல்ல வேண்டும். நீங்கள் விரும்புவதை ஜீரணித்துக் கொள்ளுங்கள். சில அறிவுரைகள் உங்களுக்கு புரியாவிட்டால் அவசரப்பட்டு ஒரு முடிவுக்கு வர வேண்டாம். அவற்றை நீங்கள் விரும்பாவிடில் அவற்றைப் பற்றிச் சிந்திக்க வேண்டாம். ஒருவர் விரும்புவது மற்றவருக்குப் பிடிக்காமலிருக்கலாம். இருப்பினும் அடிப்படையான கருத்துக்களில் வேறுபாடுகள் இருக்க முடியாது.

55. சத்சங்கத்தின் மூலம் சம்சாரமாகிய பெருங்கடலைப் கடப்பதற்கும் பிரம்ம ஞானம் பெறுவதற்கும் ஒருவருக்குச் சரியான வேட்கை இருக்க வேண்டும்.

56. ஞானிக்கு முன்னர் செல்லும்போது, எதையாவது தெரிந்துகொள்ளும் ஆவலோடு

கேள்விகள் கேட்காதீர்கள். அவர் முன் அடக்கத்துடன் அமர்ந்திருக்கவேண்டும். அவரை உற்றுக் கவனியுங்கள். விருப்பு வெறுப்பில்லாமல் அவர் சொல்வதைக் கேளுங்கள். உங்களுக்கு உண்மையில் விளக்கம் தேவையான பொருள்களைப்பற்றி மட்டும் கேள்வி கேளுங்கள்.

57. பொருத்தமான கேள்விகளை மட்டும் கேளுங்கள். அரசியலிலும், பொது விஷயங்களிலும் அவரை இழுக்க வேண்டாம்.

58. சாதுவின் முன் தியானம் செய்யுங்கள். உங்கள் சந்தேகங்களைத் தீர்க்கக்கூடிய உள்ளொளி பிறக்கும்.

59. அறிவாளியான ஒருவனுல்தான் ஞானிகளின் தொடர்பினுல் உண்மையைத் தெளிவாகப் புரிந்துகொள்ள முடியும்.

## முனிவர்களுக்குத் தொண்டு செய்தல்

60. முனிவர்களோடு வாழ்ந்து அவர்களின் அறிவுரைகளைப் பின்பற்றி நடப்பதுதான் இறைவனை அடைவற்குரிய எளிய வழி.

61. ஞானிகளின் சொற்கள் உள்ளத்திற்கு உயிரூட்டி அறியாமையால் ஏற்படும் ஐயங்களைப் போக்கும். அவர்கள் அறிவுரைகளால் அதிக அளவு பயன்பெற முயற்சி செய்யுங்கள்.

62. முனிவர்களின் அருளில்லாவிடில், தெய்வீக வாழ்க்கையின் இரகசியங்களை உணர முடியாது. அவர்கள் அறிவுரைகளின்படி சரிவர நடப்பதாலும், அவர்களுக்குத் தொண்டு செய்வதாலும் அவர்களுடைய அருளைப் பெறலாம்.

63. முனிவர்களுக்குத் தொண்டு செய்வது மோட்சத்தின் வாயிலாகும்.

64. முனிவர்களுக்குத் தொண்டு செய்யும் நல் வாய்ப்பினைப் பெறுவது மிகவும் கடினமானது.

65. சாதகன் தன் மோட்சத்தை அல்லது விடுதலையை நெருங்கும்போது முனிவர்களின் தொடர்பு ஏற்படும்.

66. முனிவர்களுக்குத் தன்னலமற்றதொண்டு செய்வதன் காரணமாக மக்களின் உள்ளத்தில் இறைவன் கோயில் கொள்வார்.

## முனிவர்களின் வாழ்க்கை வரலாறு

67. முனிவர்களின் வரலாறு மோட்சத்தை நாடிச் செல்லும் பாதையில் உதவும் திசையறி கருவியின் முட்கள்.

68. முனிவர்களின் வரலாற்றைக்கூறும் நூல் உங்களை விட்டு நீங்காத நண்பனும், ஒப்பற்ற பொக்கிஷமும் ஆகும்.

69. முனிவர்களின் வரலாற்றைப் படிப்பதால் உங்கள் வாழ்க்கையைப் புனிதமாக நடத்த உதவும். நீங்கள் அவர்களுடைய மேன்மையான பண்புகளைப் பெறுவீர்கள்.

70. ஆன்மீகப் பாதையில் படிப்படியாக உரு வாக்கப் பெறுவீர்கள். அவர்களால் உணர்வூட்டப் படுவீர்கள்.

71. இறையுணர்வு பெறுமாறு உங்கள் உள்ளத்தில் உந்துதல் உண்டாகும்.

72. பெரிய முனிவர்களையும் சாதுக்களையும் எண்ணிப்பாருங்கள் நீங்கள் உணர்ச்சி வசப்படுவீர் கள். அவர்கள் இறக்கவில்லை. இப்போதும் உயிரோடிருக்கிறார்கள்.

கூறுவதோடு, சரியான வாழ்க்கை முறையையும் போதிக்கிறார்கள். அறநெறியாளர்களின் தொடர்பு சரியான பாதையில் ஒளிவீசிக் காட்டுவதோடு, மனிதனுக்கு உள்ளே இருக்கும் இருளையும் அகற்றுகிறது. மாயையும் இந்த பயங்கரமான மனத்தையும் வெல்வதற்குரிய சரியான வழி சத்சங்கமேயாகும்.''

''போதுமென்ற மனம், சத்சங்கம், ஆராய்ச்சி, சாந்தி ஆகியவை ஆன்மீக ஞானம் பெறுவதற்குரிய நான்கு வழிகளாகும். இந் நான்கு வழிகளையும் பெற்றிருப்பவர்கள் சம்சாரமாகிய பெருங்கடலைக் கடந்தவர்கள். ''போதுமென்ற மனம்'' ஒரு நல்ல லாபமாகவும், ''நல்லவர் தொடர்பு'' என்பது சரியான காரணமாகவும், ''ஆராய்ச்சி'' என்பது உண்மை ஞானமாகவும் ''சாந்தி'' என்பது மனிதன் பெறும் பேரின்பமாகவும் கருதப்படுகின்றன. இந்த நான்கு வழிகளையும் பெற்றுள்ள ஒருவனுக்கு எல்லாவகையான செல்வங்களும் வளங்களும் வாழ்வில் கிடைக்கும். இந்தப் பண்புகளிலொன்று வளர்ச்சியடையுமானால், மனதிலுள்ள குற்றங்களின் ஆற்றலைக் குறைக்க உதவும். நல்ல பண்புகளை வளர்ப்பதால், தீய பண்புகளை அடக்கி, வெளியேற்றி விடலாம். ஆனால் ஒரு தீய பண்பை வளர்ப்பதால் தீய குணங்கள் பெருகி, நல்ல பண்புகள் வெளியே தள்ளப்படும். மனம் என்பது தவறுகள் நிறைந்த பாலைவனம். அதில் நன்மை, தீமை என்னும் இரு கரைகளுக்கிடையே ஆசை என்னும் காட்டாறு கரைபுரண்டு ஓடிக்கொண்டு இருக்கிறது.'

''எனவே இராமா! உன் மனதைத் தைரியத்துடன் அடக்கி உன் வாழ்க்கையை நல்ல முறையில் நடத்த மேற்கூறிய நான்கு வழிகளையும் செம்மையாக வளர்த்துக்கொள்.''

64. முனிவர்களுக்குத் தொண்டு செய்யும் நல் வாய்ப்பினைப் பெறுவது மிகவும் கடினமானது.

65. சாதகன் தன் மோட்சத்தை அல்லது விடுதலையை நெருங்கும்போது முனிவர்களின் தொடர்பு ஏற்படும்.

66. முனிவர்களுக்குத் தன்னலமற்றதொண்டு செய்வதன் காரணமாக மக்களின் உள்ளத்தில் இறைவன் கோயில் கொள்வார்.

## முனிவர்களின் வாழ்க்கை வரலாறு

67. முனிவர்களின் வரலாறு மோட்சத்தை நாடிச் செல்லும் பாதையில் உதவும் திசையறி கருவியின் முட்கள்.

68. முனிவர்களின் வரலாற்றைக்கூறும் நூல் உங்களை விட்டு நீங்காத நண்பனும், ஒப்பற்ற பொக்கிஷமும் ஆகும்.

69. முனிவர்களின் வரலாற்றைப் படிப்பதால் உங்கள் வாழ்க்கையைப் புனிதமாக நடத்த உதவும். நீங்கள் அவர்களுடைய மேன்மையான பண்புகளைப் பெறுவீர்கள்.

70. ஆன்மீகப் பாதையில் படிப்படியாக உரு வாக்கப் பெறுவீர்கள். அவர்களால் உணர்வூட்டப் படுவீர்கள்.

71. இறையுணர்வு பெறுமாறு உங்கள் உள்ளத்தில் உந்துதல் உண்டாகும்.

72. பெரிய முனிவர்களையும் சாதுக்களையும் எண்ணிப்பாருங்கள் நீங்கள் உணர்ச்சி வசப்படுவீர் கள். அவர்கள் இறக்கவில்லை. இப்போதும் உயிரோடிருக்கிறார்கள்.

கூறுவதோடு, சரியான வாழ்க்கை முறையையும் போதிக்கிருர்கள். அறநெறியாளர்களின் தொடர்பு சரியான பாதையில் ஒளிவீசிக் காட்டுவதோடு, மனிதனுக்கு உள்ளே இருக்கும் இருளையும் அகற்று கிறது. மாயையும் இந்த பயங்கரமான மனத்தை யும் வெல்வதற்குரிய சரியான வழி சத்சங்கமே யாகும்.''

''போதுமென்ற மனம், சத்சங்கம், ஆராய்ச்சி, சாந்தி ஆகியவை ஆன்மீக ஞானம் பெறுவதற்குரிய நான்கு வழிகளாகும். இந் நான்கு வழிகளையும் பெற்றிருப்பவர்கள் சம்சாரமாகிய பெருங்கடலைக் கடந்தவர்கள். ''போதுமென்ற மனம்'' ஒரு நல்ல லாபமாகவும், ''நல்லவர் தொடர்பு'' என்பது சரியான காரணமாகவும், ''ஆராய்ச்சி'' என்பது உண்மை ஞானமாகவும் ''சாந்தி'' என்பது மனி தன் பெறும் பேரின்பமாகவும் கருதப்படுகின்றன. இந்த நான்கு வழிகளையும் பெற்றுள்ள ஒருவனுக்கு எல்லாவகையான செல்வங்களும் வளங்களும் வாழ் வில் கிடைக்கும். இந்தப் பண்புகளிலொன்று வளர்ச்சியடையுமாளுல், மனதிலுள்ள குற்றங் களின் ஆற்றலைக் குறைக்க உதவும். நல்ல பண்பு களை வளர்ப்பதால், தீய பண்புகளை அடக்கி, வெளி யேற்றி விடலாம். ஆனுல் ஒரு தீய பண்பை வளர்ப் பதால் தீய குணங்கள் பெருகி, நல்ல பண்புகள் வெளியே தள்ளப்படும். மனம் என்பது தவறுகள் நிறைந்த பாலைவனம். அதில் நன்மை, தீமை என்னும் இரு கரைகளுக்கிடையே ஆசை என்னும் காட்டாறு கரைபுரண்டு ஓடிக்கொண்டு இருக்கிறது.'

''எனவே இராமா! உன் மனதைத் தைரியத்து டன் அடக்கி உன் வாழ்க்கையை நல்ல முறையில் நடத்த மேற்கூறிய நான்கு வழிகளையும் செம்மை யாக வளர்த்துக்கொள்.''

கூறுவதோடு, சரியான வாழ்க்கை முறையையும் போதிக்கிறார்கள். அறநெறியாளர்களின் தொடர்பு சரியான பாதையில் ஒளிவீசிக் காட்டுவதோடு, மனிதனுக்கு உள்ளே இருக்கும் இருளையும் அகற்று கிறது. மாயையும் இந்த பயங்கரமான மனத்தை யும் வெல்வதற்குரிய சரியான வழி சத்சங்கமே யாகும்.''

''போதுமென்ற மனம், சத்சங்கம், ஆராய்ச்சி, சாந்தி ஆகியவை ஆன்மீக ஞானம் பெறுவதற்குரிய நான்கு வழிகளாகும். இந் நான்கு வழிகளையும் பெற்றிருப்பவர்கள் சம்சாரமாகிய பெருங்கடலைக் கடந்தவர்கள். ''போதுமென்ற மனம்'' ஒரு நல்ல லாபமாகவும், ''நல்லவர் தொடர்பு'' என்பது சரியான காரணமாகவும், ''ஆராய்ச்சி'' என்பது உண்மை ஞானமாகவும் ''சாந்தி'' என்பது மனி தன் பெறும் பேரின்பமாகவும் கருதப்படுகின்றன. இந்த நான்கு வழிகளையும் பெற்றுள்ள ஒருவனுக்கு எல்லாவகையான செல்வங்களும் வளங்களும் வாழ் வில் கிடைக்கும். இந்தப் பண்புகளிலொன்று வளர்ச்சியடையுமானால், மனதிலுள்ள குற்றங் களின் ஆற்றலைக் குறைக்க உதவும். நல்ல பண்பு களை வளர்ப்பதால், தீய பண்புகளை அடக்கி, வெளி யேற்றி விடலாம். ஆனால் ஒரு தீய பண்பை வளர்ப் பதால் தீய குணங்கள் பெருகி, நல்ல பண்புகள் வெளியே தள்ளப்படும். மனம் என்பது தவறுகள் நிறைந்த பாலைவனம். அதில் நன்மை, தீமை என்னும் இரு கரைகளுக்கிடையே ஆசை என்னும் காட்டாறு கரைபுரண்டு ஓடிக்கொண்டு இருக்கிறது.'

''எனவே இராமா! உன் மனதைத் தைரியத்து டன் அடக்கி உன் வாழ்க்கையை நல்ல முறையில் நடத்த மேற்கூறிய நான்கு வழிகளையும் செம்மை யாக வளர்த்துக்கொள்.''



ஆன்மீக சிந்தனை செய்யும் எவனும் சம்சாரத்தி லுள்ள துன்பங்களாலும், துயரங்களாலும் பாதிக் கப்படமாட்டான். அவன் மனதில் சமநிலையும், சமநோக்கும் படைத்தவனாக இருப்பான். எப்பொழு தும் அமைதியுடனும் மகிழ்ச்சியுடனும் இருப்பான். மாயை அவனை நெருங்காது. அவன் எப்பொழுதும் அழியாததும் சுடரொளி வீசிக்கொண்டிருப்பது மான ஆன்மாவைப் பற்றிய தியானத்திலேயே ஈடுபட்டிருப்பான்.

மனிதன் ஆத்ம ஞானத்தைப் பற்றிய நூல் களைப் படித்துக் கொண்டும், ஞானிகளோடு தொடர்பு கொண்டும், நால்வகை வழிகளையும், நல்லொழுக்கத்தையும் வளர்த்துக் கொண்டும், புலன்களைக் கட்டுப்படுத்தியும், ஆத்மஞானம் தனக்கு உதிக்கின்ற வரையில் எப்பொழுதும் ஆன்ம விசாரணையில் மூழ்கியும் இருக்க வேண்டும்.

## ஸ்ரீமத் பாகவதம்

கிருஷ்ணபரமாத்மா உத்தவரிடம் சொல்கிறார்:

பற்றுக்களையெல்லாம் அழித்துவிடும் சத்சங்கத் தினால் என்னை அடையலாம். ஆனால் யோகம், சாங்கியம், தருமம், வேத நூல்களைப் படித்தல், தவம், துறவு, ஏராளமான வெகுமதிகள், அறச் செயல்கள், அக்னிஹோத்திரம் போன்ற அறச் செயல்கள், பட்டினி, விரதங்கள், வேள்விகள், இரகசிய மந்திரங்கள், புண்ணிய ஸ்தல யாத்திரை, இயமம், நியமம் ஆகிய இவற்றால் எல்லாம் என்னை எளிதில் அடைய முடியாது.

இராஜஸ அல்லது தாமஸகுணமுள்ளவர்களான த்வஷ்திரி என்ற முனிவரின் மகன் வ்ருத்ரன், பிரக லாதன், தைத்யர்கள், அசுரர்கள், ராட்சதர்கள், கந்தர்வர்கள், அப்சரஸ்கள், நாகர்கள்,

சித்தர்கள், சாரணர்கள், குஹ்யர்கள், வித்யா தரர்கள், பல மிருகங்களும் பறவைகளும், மனித குலத்தில் வைசியர்கள், சூத்திரர்கள், பெண்கள், இழிந்த குலத்தவர்களான சண்டாளர் ஆகியோர் ஞானிகளோடும் நல்ல பண்புடையவர்களோடும் தொடர்பு கொண்டு இருந்ததால்தான் என்னை அடைந்தார்கள்.

வைசபர்வா, பலி, பாணன், மயன், விபீடணன், சுக்ரீவன், ஹனுமான், ஜாம்பவான் என்னும் கரடி, கஜேந்திரன் என்னும் யானை, ஜடாயு என்னும் கழுகு, துலதரன் என்ற வணிகன் தர்மவியாதன் என்னும் வேடன், குப்ஜா என்ற வாசனைப் பொருள் வியாபாரி, கோபியர்கள், பிருந்தாவனத்தில் யாகம் செய்துகொண்டிருந்த பிராமணர்களின் மனைவியர் ஆகிய எல்லோரும் வேதங்களைப் படிக்கவில்லை; கற்றறிந்த பெரியோர் காலடியில் அமர்ந்து ஞானம் பெறவில்லை; பட்டினியும் விரதமும் அனுஷ்டிக்கவில்லை: தவம் செய்ய வில்லை. ஆனால் அவர்கள் முனிவர்கள், சாதுக்கள் ஆகியவர்களோடு தொடர்புகொண்டு என்னை அடைந்தார்கள்.

முனிவர்களின் தொடர்பினால் பெருகிய அன்பின் காரணமாக கோபிகள், பசுக்கள், மரங்கள், மிருகங்கள் பாம்புகள், மற்றும் அறிவு குறைந்தவர்கள் விடுதலைபெற்று என்னை எளிதில் அடைந்தனர். யோகம் அல்லது சாங்கியம், தருமம், விரதங்கள், தவம், யாகம், வேதங்களைக் கற்பது, கற்றுக் கொடுப்பது, துறவு ஆகியவற்றால் என்னை எளிதில் அடைய முடியாது. நான் பலராமனுடன் அக்ரூரரால் மதுரா நகருக்கு அழைத்துச் செல்லப்பட்ட போது, என்னிடம் பக்தியினால் தங்கள் உள்ளங்களைப் பறிகொடுத்திருந்த கோபியர்கள் என்

பிரிவைத் தாங்காது துயரமடைந்தார்கள். என்னைத் தவிர வேறு எப்பொருளையும் அடைவதில் மகிழ்ச்சியோ அக்கறையோ அவர்களுக்கில்லை. அவர்களுக்குப் பிரியமானவனுன என்னுடன் கழித்த பல இரவுகள் கண நேரமாகத் தோன்றியபோதிலும், என்னைவிட்டுப் பிரிந்தபோது அதே இரவுகள் பல யுகங்களாகத் தோன்றின. சாதுக்கள் சமாதி நிலையில் இருக்கும்போது நாம ரூப வேறுபாடுகள் தெரியாமல் இருப்பது போலவும், கடலில் சங்கமமாகிக் கடல் நீரோடு ஒன்றுகலந்த ஆற்று நீரைப் போலவும், பக்தியினுலும் பற்றினுலும் தங்கள் உள்ளத்தையும் மனத்தையும் என்னிடம் செலுத்தியிருந்த கோபிகளுக்கு தங்கள் உடல், உறவினர்கள், அருகிலும் தூரத்திலுமிருந்த பொருள்கள் ஆகியவற்றைப் பற்றி உணர்வே இல்லை.

அப்பாவிகளான ஆயிரக்கணக்கான கோபியர் என்னுடைய உண்மையான பரப்பிரம்ம சொரூபத்தை அறியாமல், என்னைத் தங்கள் அன்புக்குரியவனுகவே கருதினுர்கள். இருப்பினும் பரப்பிரம்மமாகிய என்னை வந்தடைந்தார்கள். அதற்குக் காரணம் சத்சங்கம் அல்லது நல்லவர்களின் தொடர்பே யாகும். ஆகையால், உத்தவா! தடைகளையும் மறுப்புக்களையும், பிரவிருத்தி மார்க்கத்தையும் நிவிருத்தி மார்க்கத்தையும், ஏற்கனவே படித்தறிந்ததையும் இன்னும் படித்தறிய வேண்டியதையும் விட்டுவிடு. விதிகளுக்கும் எதிர் விதிகளுக்கும் மேலாக எழுந்திரு. சுருதிகள், ஸ்மிருதிகள் ஆகியவைகளைப் பற்றிக் கவலைப்படாதே. முழு மனத்துடனும், முழு பக்தியுடனும் எல்லா உயிர்கட்கும் ஆத்மாவாகிய என்னைச் சரண் அடைந்துவிடு. நீ எந்த இடத்திலும், எந்த காரணத்துக்காகவும் அச்சப்பட வேண்டியதில்லை.

---





## சமரஸப் பிரார்த்தனை

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

**ஓம் —கருணையும் அன்பும் நிறைந்த இறைவா!**

உனைத் தொழுது வணங்குகின்றோம்;
நீ எங்கும் உள்ளாய், எல்லாம் வல்லாய்,
எல்லாம் அறிவாய்:

நீ ஸச்சிதானந்தப் பொருள் —மெய்ப்பொருளும்,
மெய்யறிவும், பேரின்பமும் நீயே;

எல்லா உயிர்களிலும் உறைபவன் நீயே.

**ஓம் —தயாபரத் தெய்வமே!**

உணரும் உள்ளமும், சமநோக்கும்,
தூய அன்பும், மெய்யறிவும், எமக்குத் தந்தருள்க;
மயக்கத்தை எதிர்க்கவும், மனதை வெல்லவும்,
உள்ளத்தில் ஒளிரும் தெய்வீகத் தன்மையை
எமக்குத் தந்தருள்க;

ஆணவம், துராசை, வெறுப்பு, பேராசை, காமம்,
வெகுளி, இவை பற்றாது எம்மைக் காத்தருள்க;
ஆன்மீக உணர்ச்சிகளை எமது உள்ளத்தில்
நிரப்பி அருள்க.

**ஓம் —உலகாளும் ஜெகதீசா!**

எல்லாப் பெயரிலும் உருவிலும்,
உனையே யாம் காண்போமாக;
எல்லாப் பெயரிலும் உருவிலும்,
உனையே யாம் வழிபடுவோமாக;
எப்பொழுதும் உனையே யாம்
சிந்தித்து வருவோமாக;
என்றென்றும் உனிலேயே யாம்
நிலைத்திருப்போமாக.

